

# செந்தமிழ்


| தொகுதி | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦௦. மார்கழி | பகுதி |
| --- | --- | --- |
| சாடு | டிசம்பர்—1969 | உ |


## மங்கையர்க்கரசி


தமிழவேள் பி. டி. இராசன்,
தலைவர், மதுரைத் தமிழ்ச் சங்கம், மதுரை.


தமிழர்களிடையே கடவுள் கொள்கை தோன்றிய நாள் முதற் கொண்டே சிவ வழிபாடு இருந்து வருகின்றது. சிவம் என்ற சொல் வடமொழியில் காணப்படுவதால் சிவம், சைவம் என்ற சொற்கள் தமிழில் புதிதாகத் தோன்றியன எனச் சிலர் சொல்லுகின்றனர். மொழி வரலாற்று அறிவும், மொழி அறிவும் நாட்டில் பரவாமையே இதற்குக் காரணம். சுமார் 3000 ஆண்டுகளுக்கு முன் வேதநெறியாளர் தமிழகத்தில் புகுந்தபொழுது அவர்களுடைய வைதிக சமயமும் வந்தது. அவர்கள் தமிழர்களுடன் கலந்து தமிழ்நாட்டவராயினர். எனினும் அவர்கள் தங்கள் சமயக் கருத்துக்களைத் தமிழில் எழுதி மக்களிடையே பரப்பவில்லை. அதன் பயனாய் இன்றுவரை வைதிக சமயக் கருத்துக்கள் தமிழ் மக்களிடம் அதிகச் செல்வாக்குப் பெறவில்லை.

அடுத்து, பௌத்த சமயம் தமிழகத்தில் புகுந்தது. பௌத்தர்கள் பாலி மொழியை மேற்கொண்டிருந்தார்கள். அவர்களும் தமிழ் மக்க

ளிடையே தமிழில் அவர்கள் கருத்துக்களைப் பரப்புவதற்கு முயற்சி செய்யவில்லை. அதனால் தமிழ்நாட்டில் பல மடங்களைக் கட்டிக்கொண்டு பிரச்சாரம் செய்தும் அவர்கள் சமயம் இங்கு வேரூன்றவில்லை. ஏறக் குறைய 2000 ஆண்டுகளுக்கு முன் சைன சமயம் தமிழ்நாட்டில் புகுந் தது. தொடக்கத்தில் அவர்களும் வடமொழியிலேயே சைன சமயக் கருத்துக்களைப் பிரச்சாரம் செய்தனர். எதிர்பார்த்த பலன் கிடைக்க வில்லை. தமிழ் மக்களிடையே தமிழில் பிரச்சாரம் செய்தால்தான் ஆதரவு பெறலாம் என்ற நுட்பத்தைப் பின்னர் உணர்ந்து அவர்கள் 1400 ஆண்டுகளுக்கு முன், தமிழும் வடமொழியும் கலந்த மணிப் பிரவாள நடையில், சமயக் கருத்துக்களையும் கதைகளையும் சொல்லத் தலைப்பட்டனர். பள்ளிகளில் கூடங்களை அமைத்துக் கல்வி கற்பிக்கத் தொடங்கினர். தமிழில் சிறு சிறு நூல்களும், இலக்கணங்களும், காப் பியங்களும் செய்தனர். அதற்குத் தமிழ்நாட்டு அரசர்களும் ஆதரவு கொடுத்தனர். அரசர்களில் சிலர் சைனராகவும் மாறினர். மன்னன் மாறவே மக்களில் பலர் அவர்கள் ஆதரவை வேண்டிச் சைனர் ஆயினர்.

இவ்வாறு 1300 ஆண்டுகளுக்கு முன் சைன சமயம் தமிழ்நாட்டில் உச்சநிலையை அடைந்தது. அக்காலத்தில் திருநாவுக்கரசர் தோன்றி னார். சைவ நெறியில் தோன்றிய அவர், சைனத்தின் செல்வாக்கைக் கண்டு இளமையிலேயே சைனரானார். சைன சமயம் தொண்டை நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் மிகுந்த செல்வாக்குடன் விளங்கிற்று. சோழநாட்டில் ஊர்கள் தோறும் இருந்த கோவில்கள் சைவப்பணியாற்றி வந்தமையால் அங்குச் சைனம் செல்வாக்குப் பெறவில்லை. திருநாவுக் கரசரின் அரிய திருத்தொண்டினால் தொண்டைநாட்டில் பல்லவ அரசு சைவமாயிற்று. ஆனால் பாண்டிய நாட்டில் சைனம் மிக்க செல்வாக் குடன் இருந்தது.

பாண்டியன் சமண சமயத்தைத் தழுவினான். அவனைப் பின்பற்றிப் பெரும்பான்மையோர் சமணராயினர். நாட்டில் பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியும் அமைச்சர், குலச் சிறையாரும் சைவர்களாக இருந் தனர். சோழர் குடியில் தோன்றிய பாண்டிமாதேவி நல்ல சைவப் பரம்பரையைச் சேர்ந்தவர். அதனால் பாண்டிய நாட்டில் மீண்டும் சைவத்தை நிலைநாட்ட வேண்டும் என்ற எண்ணமுடையவராக இருந் தார். அதுபோன்ற எண்ணமுடைய அமைச்சர் குலச்சிறையாரும் அரசிக்குத் துணையாக இருந்துவந்தார்.

அந்நாளில் திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் ஊரூராய்ச் சென்று இன்னிசையால் சிவனை வழிப்பட்டுச் சைவத்திற்கு உயிர்ப்

பளித்து வந்தனர். இதனைக் கேள்வியுற்ற மங்கையர்க்கரசியார், அமைச்சரின் கருத்தையும் அறிந்து, திருஞானசம்பந்தரைப் பாண்டி நாட்டிற்கு அழைக்க முடிவு செய்தனர்.

திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் திருமறைக்காட்டில் எழுந்தருளியிருப்பதைக் கேள்வியுற்றுப் பாண்டிமாதேவி, தூதுவர்கள் மூலம் அழைப்பு அனுப்பினர்.

திருஞானசம்பந்தரும் அரசியாரின் அழைப்பை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டார். உடனிருந்த திருநாவுக்கரசரிடம் செய்தியைக் கூற, அவர் தாமும் உடன்வருவதாகக்கூறினர். அவர் அமணர்களுடைய தீச்செயல்களை நன்கு அறிந்தவர். அதனுல் பாலராகிய ஞானசம்பந்தருக்குத் தீங்கு விளையுமோ என அஞ்சினர். கோள்களும் சரியில்லாமையைக் கருதிச் சம்பந்தர் பாண்டிநாடு செல்வதை அவர் விரும்பவில்லை. திருவருட் பணியை மேற்கொண்டு தாம் செல்வதால் கோள்களால் தீங்கு விளையாது என்று சம்பந்தர் கூறிப் புறப்பட்டார். அரசியாரின் விருப்பப்படி அமைச்சர் குலச்சிறையார், மதுரை எல்லையிலேயே சம்பந்தரை எதிர்கொண்டு வரவேற்றுர். ஆலவாய் அண்ணலின் திருக்கோபுரத்தைக் கண்ட ஆளுடையபிள்ளையார் வணங்கி வலம்வந்து கோவிலின் உள்ளே சென்று சொக்கநாதரை வழிபட்டார். பாண்டிமாதேவியாரும் திருக்கோவிலுக்குவந்து ஆண்டவன் திருமுன் பெருமானைக்கண்டு வணங்கி அவர் வருகையால் பாண்டி நாடும், மன்னனும், தாமும் உய்ந்ததாகக் கூறினர். பின்னர், சம்பந்தர் தம்முடன் வந்த சிவனடியார்கள் சூழத் தமக்கென்று ஒதுக்கப்பெற்ற திருமடத்தில் எழுந்தருளியிருந்தார்.

திருஞானசம்பந்தர் வருகையைக் கேள்வியுற்ற சமணர்கள் கலக்கமுற்று, அரசனிடம் சென்று முறையிட்டனர். அதுகேட்ட அரசனும் கவலைகொண்டான். தாங்கள் மந்திர சக்தியினுல் திருநீற்றுச் சிறுவனை இந்நாட்டை விட்டே ஓட்டிவிடுவோம் என்று சமணர்கள் கூறினர். அரசனும் அவ்வாறே செய்க என்றனன்.

ஆனல் சமணர்கள் மந்திரம் ஒன்றும் பலிக்காதது கண்டு அவர்கள் இரவில் மறைந்து சென்று, ஞானசம்பந்தர் தங்கியிருந்த திருமடத்தில் தீயிட்டனர். இவ்வஞ்சனைச் செயலை அறிந்த சம்பந்தர், அத்தீ "மெல்லவே சென்று பாண்டியனுக்காகுக" என்று திருவுள்ளம் கொண்டார். அவ்வாறே அத்தீ பாண்டியனைச் சேர்ந்து வெப்பநோயை உண்டாக்கிற்று.

தாங்க முடியாத வெப்பத்தினல் அரசன் துன்புற்ருன்— சமணர்களின் மந்திர தந்திரங்களால் அந்நோயைத் தணிக்க முடியவில்லை. பாண்டிமா தேவியாரும் கவலையுற்றுத் "திருஞானசம்பந்தப் பெருமான் ஒருவரே இதைத் தீர்க்க வல்லவர்" என்பதை நினைத்தார். அதை அரசனிடம் கூறி அவர் உடன்பாட்டையும் பெற்று ஞானசம்பந்தருக்கு அழைப்பு அனுப்பினர். சம்பந்தரும் அதை ஏற்றுத் திருஆலவாய்ச் சொக்கநாதரை வணங்கி, அரசனைக் காணச் சென்ருர்.

பிணியுற்ற அரசன் தக்க முறையில் அவரை வரவேற்றுத் தன் நோயைத் தீர்க்க வேண்டினன். சமணர்கள் தாங்களே தீர்ப்பதாகக்கூறினர். அவர்கள் சொற்களில் நம்பிக்கையை இழந்த அரசன், தன் உடலின் இடது பாகத்தில் சமணர்களும், வலது பாகத்தில் ஞானசம்பந்தரும் நோயைத் தீர்க்க வேண்டினன். "யார்,நோயைத் தீர்க்கின்ருர்களோ அவர்களே வென்றவர்கள்" என்றும், "அவர்கள் சமயத்தை ஏற்றுக் கொள்வேன்" என்றும் அரசன் தன் முடிவைக் கூறினன். பாண்டிமா தேவியார் திருஞானசம்பந்தரின் வயதைஎண்ணிப் பாலராயிற்றேஎன்று சிறிது ஐயங்கொண்டார். அதைக் குறிப்பினல் உணர்ந்த ஞானசம்பந்தர் 'என்னைப் பாலன் என்று எண்ணி இரங்க வேண்டாம். திருஆலவாயான் அருளினல் நான் வெல்வேன்' என்று கூறினர். ஆலவாயான் திருநீற்றைத் தடவிச் சம்பந்தர், அரசன் உடலின் வலதுபகுதி நோயைத் தீர்த்தார். சமணர்களால் இயலவில்லை; தோல்வியுற்றனர்; பின்னர் அவர்கள் பகுதி உடல் நோயையும் சம்பந்தரே தீர்த்து வெற்றி கொண்டார். தோல்வியுற்ற சமணர்கள், அரசனிடம் தங்களுக்கு இன்னும் இரண்டுமுறை வாதம்செய்ய வாய்ப்பளிக்க வேண்டுமென்றனர். சம்பந்தரும் அதற்கு இசைந்தார். அதன்படி முதலில் அனல்வாதம் நடைபெற்றது; சமணர்கள் தங்கள் சமயமந்திரத்தை ஓர் ஏட்டில் எழுதித் தீயிலிட்டனர். ஞான சம்பந்தர் தேவாரப்பாடல் ஒன்றை எழுதி அத்தீயிலிட்டார். சமணர் ஓலை வெந்து சாம்பலாயிற்று. சம்பந்தர் ஓலையோ பச்சையாக இட்டபடியே இருந்தது! புனல்வாதம் செய்ய விரும்பினர். வைகைப் பெருக்கில் இருவரும் தங்கள் தங்கள் ஏடுகளை விட்டனர். சமணர் விட்ட ஏட்டை வெள்ளம் இழுத்துச் சென்றது. சம்பந்தர் விட்ட ஏடோ வெள்ளத்தை எதிர்த்துச் சென்றது. அவ்வேடு சென்றடைந்த இடமே இன்றும் திருஏடகம் என்று விளங்குகிறது. இவ்வாறு அனல், புனல் இரண்டு வாதங்களிலும் சமணர்கள் தோல்வியுற்றனர். சம்பந்தர் வெற்றி கண்டார். அரசன் தான் முன் கூறியபடி, சிவநெறியை மேற்கொண்டான். சமணர்கள் தங்கள் சொல்லைக் காப்பாற்றுவதற்

காகக் கழுவேற்றினர். நாடும் மறுபடியும் சிவநெறியை ஏற்று உயர்வு பெற்றது.

பாண்டிய நாட்டில் மன்னனும், நாட்டு மக்களும் சமணர்களாக இருந்த காலத்தில் பாண்டிமாதேவி, அமைச்சர் குலச்சிறையார் சிவ நெறியாளர்களாக இருந்தனர். மாறுபட்ட சமயக் கருத்துடையவர்கள் என்று அரசனும், மக்களும் அவர்கள்பால் வெறுப்புக்கொள்ளவில்லை. தன் மனைவியும் அமைச்சரும் அவர்கள் விருப்பம்போல் எச்சமயத்தைப் பின்பற்றவும், அரசன் முழு உரிமை கொடுத்திருந்தான் என்பதை இவ்வரலாற்றின் மூலம் நாம் அறிகின்றோம். கணவன் ஏதேனும் தவறு செய்தால் அவனை நல்வழிப்படுத்த வேண்டியது மனைவியின் தலையாய கடமையாகும் என்பதை மங்கையர்க்கரசியார் நன்கு உணர்ந்திருந் தார்கள். அது போன்று அரசனை நல்வழிப்படுத்த வேண்டியது அமைச் சரின் கடமையாகும் என்பதையும் குலச்சிறையார் உணர்ந்திருந்தார். பாண்டிமாதேவியும், அமைச்சரும் தங்கள் தங்கள் கடமையை உணர்ந்து எதற்கும் அஞ்சாது செயலாற்றியதன் மூலம், மன்னனைக் காப்பாற்றிப் பாண்டிய நாட்டில் சைவத்தையும் நிலைநிறுத்தினர். அவர்கள் அன்று தங்கள் கடமையைச் செய்யத் தவறி இருப்பார்களா யின், தமிழ்ப்பண்பாடு மறைந்திருக்கும்!

"மங்கையர்க்குத் தனிஅரசி! எங்கள் தெய்வம்! வளவர்திருக்
குலக்கொழுந்து! வளைக்கை மானி!
செங்கமலத் திருமடந்தை! கன்னி நாடாள் தென்னர்குலப்
பழிதீர்த்த தெய்வப் பாவை!
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளினாலே இருந்ததமிழ்
நா(டு) உற்ற இடர்நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப் போற்றுவார்
கழல்எம்மால் போற்ற லாமே".

— பெரியபுராணம்

# முடிவின் தொடக்கம்

**டாக்டர் தா. வே. வீராசாமி, எம். ஏ., பி. எச். டி.,**
தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம்.

தமிழ்க் காப்பிய உலகில் முதன் முதலாக மலர்ந்த இருமலர்கள் சிலம்பும் மேகலையுமே. இவற்றுள் பெற்றோர் கதையைச் சொல்வது சிலம்பு. மகளின் கதையைக் கூறுவது மேகலை. முடியுடை மூவேந்தரின் மூன்று நாடுகளாம் தமிழகம் முழுவதும் பரவி நிற்பது இளங்கோவின் படைப்பு. கடல் கடந்தும் ஒலிப்பது சீத்தலைச் சாத்தனின் மேகலை. தனிப்பட்டவர்க்குத் துன்பம் செய்தவன் அரசனே ஆயினும் அவ்வரசனையே அடியோடு எதிர்ப்பது கண்ணகி மரபு. அரசே பிழை செய்தாலும் அதை மன்னித்து அன்புநெறியில் இன்பம் தழைக்கச் செய்வது மணிமேகலை மரபு. இல்லறத்தின் இயல்பெல்லாம் நன்கு விளங்குதற்கு எழுந்தது முன்னது. துறவறத்தின் செம்மையை எங்கும் பரப்ப முயன்றது பின்னது. இங்ஙனம் இரு காப்பியங்களும் வேறுபட்டே இருப்பனவா அல்லது ஒற்றுமை மணமும் உடையனவா என்ற கேள்வி, எளிதில் விடையளிக்க முடியாதது.

இரு காப்பியங்களையும் ஒத்திட்டுக் காண அவற்றிலமைந்த முதற் காதைகளை மட்டும் காண்போம். சிலம்பில் தொடக்கமாக அமைந்தது மங்கல வாழ்த்துப்பாடல். மணிமேகலையின் தொடக்கம் விழாவறை காதை. இவை இரண்டையுமே மேலோட்டமாகப் பார்க்கும்போது மகிழ்ச்சியின் இரு விதைகளாகவே படுகின்றன.

சற்று ஆழ்ந்து பார்ப்போமாயின் பிறர்க்கு மங்கலம் விளையவேண்டும் என்ற ஆர்வத்துடன் வாழ்த்துவது சிலம்பின் தொடக்கம். "இந்திர விழா வருகிறது; அதைக் கொண்டாட, வேண்டுவன செய்க" எனக்கூறி ஆணையுடன் வாழ்த்துவது மணிமேகலைத் தொடக்கம். இவற்றின் ஆர்வமும் ஆணையும் இருவேறு போக்கில் செல்கின்றன.

தொடக்கத்திலேயே இயற்கைப் பொருள்களை வாழ்வின் குறிப்புப் பொருள்களாகக் காண்கின்றது இளங்கோ உள்ளம். திங்கள்-அரசனின் ஆட்சி; கதிரவன்-அவனது ஆணை; மழை-அவன் அளி; புகார் - அரசன் குடியோடு பொருந்தியது—எனவே, இங்ஙனம் கண்ட கவிஞரின் வாய் இந்நான்கையும் காப்பியத்தின் புதுமை வாழ்த்தாகப் போற்றுகின்றது.

மணிமேகலையில் புகார் தவிர, மற்றவற்றைப் பற்றிய கருத்து இல்லை. அதன் பண்பு மேம்பட வேண்டும் என்ற குறிப்பைச் சுட்டுகின்றார் சாத்தனார். இதற்குச் சோழன் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் அகத்தியன் சொற்படி நடந்தான். இவ்வாறு காப்பியத் தொடக்கத்தையே, பெரியோர் சொல் போற்றுகின்ற அடிப்படை வளர்ச்சிப் பண்பெனக் கொண்டு எழுதுகின்றார் சாத்தனார்.

சிலம்பில் காணும் புகார், உயர்ந்தோர் உறைவிடம். விண்ணாட்டு இன்பமும், நாகநாட்டுப் புகழும் பொருந்தியது. இங்கு முதுமை ஆற்றலாக விளங்குவன மழை போன்ற கொடை, அரசற்கு அடுத்த செல்வம், அறச் செல்வத்தை வறியோர்க்கு அளிக்கும் அருள்—என்பனவாம். இனி, இளமையின் பண்பாகப் பெண்கள் போற்றியன, திருமகளின் அழகும், வடமீனின் கற்புமே; இளைஞர் போற்றியன—புகழும், தலைமையும். இங்ஙனம் சிலம்பின் தொடக்கத்தில், தனி மனிதர் வாழ்வைத் தெளிவாகக் காண்பது போல் மணிமேகலையில் காண இயலவில்லை.

குடிமை நிலையில் நடைபெறும் செயல், மணம், பிள்ளைகளின் மணம் முடிக்க, ஒரே நிலையில் அமைந்த பெற்றோர் நினைந்தனர். நில வணிகமும், கடல் வணிகமும் ஒன்றுகூடித் தம்மக்கட்கு மணம் செய்து மகிழத் திட்டமிட்டது. எனவே, செல்வம் என்ற ஓர் அடிப்படையில் மணம் பற்றி ஒரு முடிவுக்கு வருவது எளிதாயிற்று. அதற்கென அவர்கள் பிறரைக் கலக்க வேண்டிய நிலை ஏற்படவில்லை. வணிகத்தில் ஒன்றினைப் பேசி உடன் முடிப்பது போலவே, கண்ணகிக்கும் கோவலனுக்கும் மணம் செய்வது பற்றி முடிவு செய்தனர். உடனே அதை ஊருக்கு அறிவிக்க, மகளிரை யானைமீது அமர்த்தி அனுப்பினர். அப்பெண்கள் என்ன கூறினர், எப்படி அறிவித்தனர் என்று நம்மால் தெரிந்துகொள்ள முடியவில்லை. எனவே பெண்கள் மங்கல நிகழ்ச்சியை அறிவிக்கப்பட்டனர்—என்பதுடன் செல்வர் சிறப்பை மேலும் உயர்த்துதற்கு (யானை மீதிருந்து மகளிர் அறிவிக்கும்) அச்செயல் உதவியது எனலாம்.

மணிமேகலையில் வரும் இந்திர விழா, ஊரின் பொது விழா! அதனைக் கொண்டாடச் சட்டென முடிவு செய்ய முடியாது. முதலில் விழாக் கொண்டாடுவது பற்றிப் பேசப் பலரையும் கலந்து கொள்ள வேண்டும். அதற்கெனச் சமயக் கணக்கரும் அமயக் கணக்கரும் விழாவிற்கு இன்றியமையாத நகர் மக்கள் என்ற நிலையிற் கூடினர். பல

மொழி பேசும் பிறநாட்டு மக்கள் விழாவிற்குரிய சிறப்பு விருந்தினர் என்ற முறையில் கூடினர். விழாவை நடத்துவதில் ஆட்சிக்கும் பங்குண்டு என்ற நிலையில் ஐம்பெருங் குழுவும் எண்பேராயமும் கலந்து கொண்டன. (இவர்களுடன் மாறுவடிவில் தெய்வங்களும் கலந்து கொண்டன என்பது அவ்வச் சமய நிலையங்கள் வந்தன எனக் கருத இடமுண்டு.) கூடியவர்கள் முதல் முதலில் பேசுவது, விழாக் கொண்டாட மறந்தால் என்ன வரும்? துன்பம் வரும்-என்பது பற்றியே! சோழன் விழாக் கொண்டாடாமற்போனால் முசுகுந்தனின் துயர்தீர்த்த பூதம் ஊர்க்குத் துயர் செய்யும் எனவும், நரகரை உண்ணும் பூதம், புகாரை விட்டு நீங்கும் எனவும் அவர்கள் எண்ணுகின்றனர். இதனால் இனி வரப்போகும் துன்பம் பற்றி நகர மக்கள் கொண்ட அச்சம் நன்கு புலப்படுகிறது. அக்காலத்தில் புகார் மக்களிடையே பூதங்களுக்குப் பலியிட்டு வணங்கிய வழக்கம் இருந்ததென்பதும் இதனால் தெரிகிறது. மேலும் பழங்காலத்தில், ஆற்றல்பெற்ற பூதங்கள், காலப்போக்கில் வந்த இந்திரன் போன்ற தெய்வங்கட்கு ஏவல் செய்தன என்றும் அறிகிறோம். அதனால் பூதங்களின் தனித்தன்மை மறையும் போக்கு வெளிப்படுகிறது. இவ்வாறு ஊர்மக்கள் கூடி, இந்திர விழாக் கொண்டாட, ஒருமித்த முடிவுகொண்டு, அதனை ஊரார்க்கு அறிவிக்கின்றனர்.

விழாக் கொண்டாட முடிவு செய்ததை முரசறைந்து கூறுபவன் முதுகுடிப் பிறந்தோன் ஆவான். செய்தி அறிவிப்பவனை மதிப்பதற்கும், கூறுவனவற்றை முறைப்படக் கூறுதற்கும் முதுமையும், குடிமையும் துணைபோகின்றன. அங்ஙனம் முரசறையும்போது நாற்படையும் சூழ்ந்துவருவதால், விழா அறிவிப்பே பெரும் முதன்மை பெறுகின்றது.

முதுகுடிப் பிறந்தோன் அறிவிப்பு, வாழ்த்தில் தொடங்கி, இந்திர விழாவின்போது தேவர்கள் புகார்க்கு வருதல், அலங்கரிக்கும் முறை, வழிபாட்டு வகை, மெய்ப்பொருள் உணர்த்தல், பகை நீக்கல் போன்றவற்றைக் கூறி மறுபடியும் வாழ்த்துடன் முடிகிறது. இதுவே, விழாவறை காதையின் உயிர்நிலையாகவும் அமைகிறது.

சமுதாயத்தில் நடைபெறும் மங்கலச் செயலைப்பற்றி முடிவு செய்வதும், பின்னர் அதை ஊரறியச் செய்வதும் பற்றித் தனிப்பட்டவர் நிலையில் நடைபெறுவதைச் சுருக்கமாகச் சிலம்பும், பொதுவாழ்வில் நிகழ்வதை விளக்கமாக மணிமேகலையும் கூறுகின்றன.

முன்னர் முடிவு செய்த மண நிகழ்ச்சியைச் செம்மையாகப் படம் பிடிக்கிறார் இளங்கோ. மணநாளன்று வீதியில் மணமுரசு, மத்தளம்,

சங்கு ஆகியவை முழங்கின. குடையும், மங்கல அணியும் எழுந்தன. மணமேடையில் காணும் காட்சியோ நெஞ்சை அள்ளுவன. தூணில் நீலப் பட்டுக்கட்டி முத்துப் பந்தர்க்கீழ் மணமக்கள் இருந்தனர். மதியம் உரோகிணியைச் சேரப் பார்ப்பனர் மறைவழி காட்டத் தீவலம் செய்தனர் மணமக்கள்.

ஆனால், சாத்தனரோ இனிமேல் நடக்கவிருக்கும் இந்திர விழாவில் செய்யத்தக்கன இவை எனக் கூறுவதாலேயே தோரண வீதியிலும் கோயில் வாயிலிலும் பூரணகும்பம், பொற்பாலிகை, பாவைவிளக்கு ஆகியவை பரப்பியதைப் பார்க்கிறோம். கமுகும், வாழையும் நட்டு, வஞ்சியும் வல்லியும் சுற்றிக் கரும்பு நட்ட காட்சியைக் காண்கிறோம். திண்ணைத் தூண்களில் முத்துத் தாமம் கட்டுவதும், வீதி மன்றம் ஆகியவற்றில் பழைய மணலை மாற்றிப் புதுமணல் இடுவதையும் நோக்குகின்றோம்; மாடத்திலும் வாயிலிலும் கொடிகள் நிரைப்பதைக் கண்டு வியக்கின்றோம். இங்ஙனம் நடவாத விழாவையும் நம் கண்முன் நிறுத்தும் சாத்தனரின் ஆற்றல் காப்பியத் தொடக்கத்திலேயே தளிர்க்கிறது.

நடந்த செயலைக் காட்டுவதில் பெருமித நடைபோடுகிறது. சிலம்பு என்று கூறினால், நடக்கவிருக்கும் செயலைக் கூறி மனக்காட்சியிலே அவற்றைக் காணுமாறு செய்வதில் இயல்புநடைபோடுகிறது மணிமேகலை எனலாம்.

மக்களை வருணிப்பதில் பழைய மரபையே இளங்கோ பின்பற்றுகிறார் எனினும் அதிலோர் புத்துயிர்த் துடிப்பும், மொழியும் பொதிந்திருப்பதைக் காண்கிறோம். கண்ணகி மணத்தில் திரண்ட மகளிரை விரையும், மலரும் உரையும் பாட்டும்கொண்டு விளங்கிய மேனியராகவும்: சாந்தும், புகையும், மாலையும், சுண்ணமும் ஏந்திய இளமார்பினராகவும்; விளக்கும், குடமும், கலமும் கொண்ட புன்முறுவலராகவும் வரிசைப்படுத்திக் காட்டும்போது மேனி, மார்பு அவர்தம் குறிப்பு என உருவ நோக்கிலிருந்து அருவ நோக்கிற்கு அழைத்துச் செல்கின்றார் சிலம்புச் செல்வர். காப்பியப் படைப்பின் நுணுக்கம் இவ்வாறு வெளிப்படுகிறது

இத்தகைய பெண்டிர், ''காதலற் பிரியாமல் தழுவிய கை நெகிழாமல் தீதறுக'' என வாழ்த்துகின்றனர். அச்சொற்களிலே பின்னர் வரப்போகும் துன்பக் குறிப்புத் துவள்கிறது -இரட்டித்த எதிர்மறை வடிவில்! இத்தகைய குறிப்புக்கள்தாம் காப்பிய மணம் பரப்பும் இலக்கிய

ஊற்றுக்களாம். இவை போன்ற மக்கள் ஓவியமோ குறிப்புப் பொதிந்த தொடரோ மணிமேகலையின் தொடக்கத்தில் காண முடியவில்லை.

எனினும், மன்னர் புகழ் பாடுவதில் இரு கவிஞர்களும் ஒன்றுபடுகின்றனர். இளங்கோவடிகள் மட்டும் தம் நூலின் முதற் காதையின் (பாடலின்) தொடக்கமும் முடிவும் சோழன் பெருமை பாடுவதாக அமைத்துள்ளார். சோழன் குடையும், ஆழியும் தொடக்கமாகி, முடியும் போது வேங்கையும் ஆழியுமாக முடிகிறது. இமயத்தில் புலி பொறித்த செய்தியைக் கூறுவது மட்டும் சோழர்தம் பெருமையாகச் சுட்டினர். இப்பகுதியைப் பொறுத்தவரை சோழர் குடிப் பெருமையைக் கூறுவதில் இயற்கை இறந்த நிலையைத் தம் கவிதையிலே இளங்கோ கலக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

மணிமேகலையில் முதன்முதலாகக் காணும் சோழர்கள் நிலை சிலம்பிற்கு முழுதும் மாறுபட்டது. சோழன் குலத்தோடு சேர்ந்து புகார் ஓங்கிப் பரந்து ஒழுகுகின்றது எனக் குலப் பெருமையைப் போற்றுவார் இளங்கோ. அங்ஙனம் ஓங்கிப் பரந்த நகரின் பண்பு மேம்படுவதற்குப் பெரியோர் சொற்பேணும் நெறியைப் பின்பற்றிய செம்பியன், இந்திர விழா எடுக்கும் காலத்து இந்திரன் அந்நகரில் உறைவதாக வாக்களித்ததை அறிகிறோம். இதனால், சோழர் நகர்ப் பெருமையைக் காக்க விண்ணக வேந்தர் அருளை நாடும் போக்கைக் காண்கிறோம். சோழன் முசுகுந்தனின் துன்பத்தைப்போக்கிய பூதம் இந்திரவிழாவை மறந்தால் இடித்து முழக்கி இடும்பை செய்யும் கொடுமைக்குச் சோழ மக்கள் அஞ்சும் அச்சம், அரசனின் ஆற்றலுக்கு மேம்பட்ட ஆற்றலை மதிப்பதின் விளைவாகும். சமுதாயத்தின் பூத வணக்கம் என்னும் பழமைப் போக்கும், அரசர்க்கு அடிபணிதல் என்னும் புதுமைப் போக்கும் ஒன்றோடு ஒன்று மோதிய பின்னர்ப் பழமையே வெல்வதைக் காண்கிறோம். தம் அரசனைக் காட்டிலும் விண்ணவர் வேந்தன் ஆயிரம் கண்ணனா யிருப்பதையும், வலிய வச்சிரப் படை பெற்றவனாயிருப்பதையும் எண்ணி, அவன் படைக் கருவிக்குக்கூடத் தனியே கோட்டம் அமைத்திருந்தனர். காவல் கருதி அவ்விடத்திலேயே கூற்றுக்கண் முரசையும் வைத்திருந்தனர் என்று கருத இடமுண்டு.

தேவர்கோன் பெருமை இவ்வாறு வளர்ந்து காணப்படினும் மலையின் கொடுமுடி போன்ற இடத்தில், பண்டைச் சோழர்தம் பெருமையை நிலைநாட்டச் சாத்தனார் தவறவில்லை. புகாரின் இந்திர விழாவிற்கு இந்திரனுடன் எல்லாத் தேவர்களும் வந்துவிடுவதால் தேவர் நகரம் வறிதாகக் காட்சியளிக்கும் அந்நிலையை விளக்கும் வாய்ப்பைப்

பயன்படுத்திக்கொள்கிறார் சாத்தனார். புதுமை உவமை மலர்கிறது. கரிகாலன் வடதிசை நோக்கிப் படையெடுத்துச் சென்ற நாளில் புகார் வறிதான நிலையே கவிஞர் கண்ணுக்குத் தென்படுகிறது. உவமை என்ற நிலையில் கரிகாலன் நிலை விண்ணவர் கோமானைவிட உயர்கிறது என்பது உண்மையே.

சிலம்பில் சோழனை வாழ்த்தும் அடிப்படை நோக்கத்தையும், சூழ் நிலையையும் ஆராய்ந்தால் அரசனின் ஆட்சிக் காப்பே அகவாழ்விற்குக் காப்பு; நாட்டின் வாழ்வே வீட்டின் செழிப்பிற்கு அடிப்படை என்பன புலப்படும். அவற்றுடன் தனிமனிதனின் ஒவ்வொரு செயலிலும் அரசரை உயர்த்தும் எண்ணம் இழையோடி மின்னுவதைக் காண்கிறோம்.

இதற்கு மாறான போக்கில் மணிமேகலை செல்கிறது. மாதம் மும் மாரி பெய்ய வேண்டும் என்ற வேண்டுகோளால் மன்னர் ஆட்சி, இயற்கை காட்டும் இரக்கத்தை நாடும் நிலையையும், செங்கோல் செலுத்த வேண்டும் என்ற விருப்பத்தால் மழை பெய்யாமல் துன்புறு தற்கு அஞ்சும் நிலையையும் உணர்கிறோம். இரு காப்பியங்களிலும் ஒன்றுபோல் விளங்கும் அடிகளில்,

> ''பசியும் பிணியும் பகையும் நீங்கி
> வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி''
>
> (சிலம்பு 5: 72, 73)
> (மணிமேகலை 1: 70, 71)

நிற்கும் நிலையில் மழையின் இன்றியமையாமை விளங்குகிறது. மேலும் மழைக் கடவுளாம் இந்திரனின் பெருமையும் அவனுக்கென எடுக்கும் விழாவின் முதன்மையும் வெளிப்படுகின்றன.

சிலம்பில் இந்திரவிழா என்ற கருத்தைப் பற்றி இளங்கோவடிகள் தந்த விளக்கத்தையும் மறக்க இயலாது. சிலம்பின் ஐந்தாம் காதை இந்திரவிழவூரெடுத்த காதை. அதில் விழா நடைபெற்றதைக் காணும் போது நகரின் இரு பிரிவு, பலவகை மக்கள், விழா நிகழ்ச்சிகள் போன்ற வற்றை மிகத் தெளிவாகக் காண்பதோடு கதையின் போக்கை விழா வின் பயனாகக் காட்டுவார் அடிகள். சாத்தனாரோ தம் நூலின் தொடக் கத்திலேயே விழா அறைவதைக் கூறுகிறார். சிலம்பின் செய்திகளை மாறுபாடின்றிச் சுருக்கமாக அமைக்கின்றார்.

எனவே, மக்கள் வாழ்த்தில் தொடங்கிய சிலம்பு வரந் தருவதில் முடிகிறது. இது, மனிதன் தெய்வமாவதின் விளக்கம். ஆனால், மேகலையோ, விழாவில் தொடங்கி நோற்பதில் முடிகிறது. இது வாழ் வின் ஆரவாரம் அமைதியில் அடங்குகிறது என்பதன் விளக்கம். இவ் வாறு இரு காப்பியத் தொடக்கமும் முடிவின் தொடக்கமாம்.

# தமிழில் பழமொழி இலக்கியம்

பேராசிரியர் வ. பெருமாள், எம். ஏ., பி. டி., எம். ஆர். ஏ. எஸ்.,
தமிழ்ப் பேராசிரியர், முதல்நிலைக் கல்லூரி, உரிகம்,
கோலார் தங்கவயல் (மைசூர் மாநிலம்).

தமிழ் இலக்கியத்தில் பழமொழியும் பழமொழிக் கருத்துக்களும் அங்கிங்கு எனாதபடி எங்கும் பரவியுள்ளன. தமிழ் இலக்கியத்திற்கும் பழமொழிக்கும் உள்ள உறவை அவற்றின் உறவு அடிப்படையில் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையாவன:-

1. பழமொழிகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்த முழு நூல்கள். அதாவது பழமொழி இலக்கியம்.

2. பழமொழிகளை அடிப்படையாக் கொண்ட தனிப் பாடல்கள்.

3. பழமொழிக் கருத்துக்களைக் கொண்ட பாடல்கள். இவற்றில் பழமொழி இலக்கியத்தை இங்கு நோக்குவோம்.

பழமொழி நானூறு, பழமொழி விளக்கம் எனும் தண்டலையார் சதகம், சயங்கொண்டார் சதகம், கோவிந்த சதகம் ஆகிய நான்கு நூல்களும் முழுக்க முழுக்கப் பழமொழிகளை அடிப்படையாகக் கொண்ட பழமொழி நூல்களாகும். பழமொழி நானூறு பதினெண்கீழ்க்கணக்கு வகையைச் சேர்ந்தது. பத்துப் பாட்டைப் 'பாட்டு' என்றும், எட்டுத் தொகையைத் 'தொகை' என்றும், கலித்தொகையைக் 'கலி' என்றும் திருக்குறளைக் 'குறள்' என்றும் அகநானூற்றை 'அகம்' என்றும் புறநானூற்றைப் 'புறம்' என்றும், சிலப்பதிகாரத்தைச் 'சிலம்பு' என்றும், மணிமேகலையை 'மேகலை' என்றும், சீவகசிந்தாமணியைச் 'சிந்தாமணி' என்றும் சுருக்கமாகக் கூறுவது போல முயற்சிச் சிக்கனம் (economy of effort) நோக்கிப் பழமொழி நானூறு 'பழமொழி' என்று குறிக்கப்படுகின்றது. நானூறு வெண்பாக்களைக் கொண்டது இந்நூல். ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு பழமொழியைக் கருத்துக் கருவூலமாகக் கொண்டு விளங்குகின்றது. இந்நூலாசிரியர் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த முன்றுறையரையர். 'முன்றுறை' என்பது பாண்டி நாட்டில் உள்ள ஓர் ஊர். இவர் பெயரைக் (முன்றுறை அரையர்; அரையர்-அரசர்) கொண்டே இவர் மன்னராகவோ, புரவலவராகவோ இருந்திருத்தல் வேண்டும் என்பதைத் தெளிவாக அறியலாம். கல்வி, அறிவு,

ஒழுக்கம், நட்பு, ஊழ், அரசியல், அமைச்சு, இல்வாழ்க்கை, அறம், ஈகை, வீடு முதலிய பல்வேறு கருத்துக்களை இந்நூல் மிகத் தெளிவாக விளக்குகின்றது. இந்நூலிலுள்ள பாடல்களை அவற்றின் பொருள் அடிப்படையில் பாகுபடுத்தி வகுத்தவர் திருமணம் செல்வக் கேசவராய முதலியார். இவர் இந்நூலுக்கு எழுதப்பட்ட பழைய பொழிப்புரையைப் பதவுரையாக்கிக் குறிப்பு, மேற்கோள், ஒத்த ஆங்கிலப் பழமொழி ஆகியவற்றையும் சேர்த்து அதிகாரங்களாக வகுத்து வெளியிட்டார். அட்டாவதானம் சுப்பராயச் செட்டியார் பழமொழி நானூற்றின் சில பாடல்களுக்கு உரை எழுதியுள்ளார். மதுரைத் தமிழ்ச் சங்கம் திரு. நாராயண ஐய்யங்கார் முதல் இருநூறு பாடல்களுக்கு உரை எழுதி வெளியிட்டார். புலவர் ம. இராசமாணிக்கம் பிள்ளையும் உரை எழுதியுள்ளார். இவ்வாறு மற்றும் பலரும் உரை எழுதியுள்ளனர்.

இந்நூலிலுள்ள பழமொழிகள் பேச்சு வழக்கில் உள்ள உலகப் பழமொழிகளாக இராமல் இலக்கியப் பழமொழிகளாக இருக்கின்றன. இந்நூலில் காணப்படும் பழமொழிகள் யாவும் அக்காலத்தில் வழக்கில் இருந்திருத்தல் வேண்டும். அவற்றுள் சில இக்காலத்தில் வழக்கு இழந்துவிட்டன. சில பழமொழிகள் இன்றும் வழக்கில் இருக்கின்றன. அவற்றில் சில பின் வருமாறு:-

பாம்பறியும் பாம்பின் கால் (7)
நிறைகுடம் நீர் தளும்பல் இல் (9)
பசி பெரிதாயினும் புல் மேயாதாகும் புலி (70)
குன்றின் மேல் இட்ட விளக்கு (80)
பூவோடு நார் இயைக்குமாறு (88)
திங்களை நாய் குரைத்தற்று (107)
நுணலும் தன் வாயால் கெடும் (114)
இருதலைக் கொள்ளி எறும்பு (141)
தொளை எண்ணார் அப்பம் தின்பார் (165)
ஓடுக ஊரோடு மாறு (195)
ஆயிரம் காக்கைக்கு ஓர் கல் (249)
தனிமரம் காடாதல் இல் (286)
நாய் வால் திருந்துதல் இல் (316)
உமிக் குற்றிக் கை வருந்துவார் (348)
நாய் காணின் கற்காணுவாறு (361)
இறைத் தோறும் ஊறும் கிணறு (378)

பழமொழி நானூற்றில் இடம்பெற்றுள்ள பழமொழிகளில் சில இப்போது வழங்கவில்லை. அவற்றுள் சில பின்வருமாறு:—

ஓர்த்தது இசைக்கும் பறை (37)
நனிவெந்நீர் இல்லம் சுடுகலா வாறு (51)
ஏற்றுக் கன்று ஏறுய் விடும் (81)
சான்றோர் அவைப்படின் சாவாது பாம்பு (86)
நாய்மேல் தவிசு இடுமாறு (105)
சுரை ஆழ அம்மி மிதப்ப (122)
கானகத் துக்க நிலா (139)
தமக்கு மருத்துவர் தாம் (149)
பாய்பவோ வெந்நீரும் ஆடாதார் தீ (159)
புலித்தலையை நாய் மோத்தல் இல் (204)
தீ நாள் திருவுடையார்க்கு இல் (235)
நோற்றார்க்குச் சோற்றுள்ளும் வீழும் கறி (256)
அயிரை இட்டு வரால் வாங்குபவர் (372)
தம்மை உடைமை தலை (387)
யானைபோய் வால் போகா வாறு (395)
பயின்றது வானக மாகிவிடும் (398)

பழமொழி நானூற்றில் இடம்பெற்றுள்ள பழமொழிகளில் சில தற்காலத்தில் வேறு வடிவத்தில்—வேறு சொற்களில் வழங்குகின்றன. அவற்றுள் சிலவற்றை மட்டும் இங்குக் காண்போம்.

பொருள் கொடுத்துக் கொள்ளார் இருள் (பழமொழி நானூறு 3)
காசு கொடுத்துத் தேள் கொட்டிக்கொள்வது போல
(இக்காலப் பழமொழி)
குலவிச்சை கல்லாமல் பாகம் படும் (6)
குலவித்தை கற்றுப் பாதி கல்லாமல் பாதி
முழந்தாள் கிழிந்தான் மூக்குப் பொதிவு (19)
குட்டிச் சுவரிலே தேள் கொட்ட நெடுஞ்
சுவரிலே நெறிகட்டினது போல.
கொற்சேரி துன்னூசி விற்பவரில் (73)
கொல்லன் தெருவிலே ஊசி விற்கலாமா
பூண்ட பறையறையார் போயினர் இல் (84)
இரும்பு பிடித்தவன் கையும் திரும்பு பிடித்தவன் கையும்
சும்மா இரா.

முழங்குறைப்பச் சாண் நீளுமாறு (100)
சாண் ஏறினல் முழம் சுருக்குகிறது.
யாருளரோ தங்கன்று சாக்கறப்பார் (131)
தாம் சாவ மருந் துண்பார் இல்லை.
மச்சேற்றி ஏணி களைவு (136)
ஏறவிட்டு ஏணியை வாங்குவதுபோல
விரையிற் கருமம் சிதையும் (164)
பதருத காரியம் சிதருது
இருப்புழிப் பெற்றல் கிடப்புழியும் பெற்றுவிடும் (190)
இடம் கொடுத்தால் மடம் பிடுங்குவான்
இருக்க இடம் கொடுத்தால் படுக்கப் பாய் கேட்பான்.
மயில் போலும் கள்வர் உடைத்து (194)
மயில் போலும் கள்ளி
வெண்ணெய் மேல் வவத்து மயில் கொள்ளுமாறு (210)
கொக்கின் தலைமேல் வெண்ணெய் வைத்துப் பிடிப்பதைப் போல
நல்லறம் செய்வது செய்யாது கேள் (367)
அடி உதவுவது போல் அண்ணன் தம்பி உதவமாட்டான்.
முயல் விட்டுக் காக்கை தினல் (370)
கைப்பறவையைப் பறக்க விட்டுக் காட்டுப் பறவைக்குக் கண்ணி வைத்தது போல.

இந்நூலில் மிகப் பயனுள்ள வரலாற்றுக் குறிப்புக்கள் இடம் பெற்றுள்ளன

தொடித் தோட் செம்பியன் தூங்கு எயில் எறிந்தது (155)

மனுநீதி சோழன் தன் மைந்தனைத் தேர்க்காலில் இட்டு ஊர்ந்தது (242)

பொற்கைப் பாண்டியன் தன் தவற்றை உணர்ந்து கையைத் துண்டித்தது (76)

பாரி முல்லைக்குத் தேரும், பேகன் மயிலுக்குப் போர்வையும் வழங்கியது (74)

பாரியின் மகள் பொன்னைச் சமைத்துப் பாணனுக்கு உணவாக வழங்கியது (381)

பகைவர் மூட்டிய தீயினின்றும் கரிகாற் சோழன் (பெருவளத்தான்) உயிர் தப்பிப் பிழைத்தது (239)

அவன் நரைமுடித்து நீதி வழங்கியது (6)

பல்யானைச் செல்கெழுகுட்டுவன் புலவனுக்குத் துறக்கம் ஈந்தது (380)

முதலிய வரலாற்றுக் குறிப்புக்களும், இராமாயணம் (247), பாரதம் (234, 356) முதலிய கதைக் குறிப்புக்களும், மாவலி (183), வாமனன் (177), மதுகைடவர் (301) முதலிய புராணக் குறிப்புக்களும் பழமொழி நானூற்றில் இடம் பெற்றுள்ளன.

பழமொழி நானூறு மிகச் சிறந்த நீதிகளை உணர்த்தி வாழ்க்கைக்கு வழிகாட்டும் நூலாகத் திகழ்கின்றது.

### சதகத்தின் பொருள்

நூறு பாடல்கள் கொண்ட நூல் சதகம் எனப்படும். சதகம் என்னும் சொல் வடமொழியைச் சார்ந்தது. வடமொழியில் 'சதம்' என்னும் சொல்லுக்கு நூறு என்று பொருள். 'சதம்' என்னும் சொல்லின் இடையில் 'க' என்னும் ஓர் எழுத்துக் கூடிச் 'சதகம்' என்று ஆயிற்று. இவ்வாறு இடையில் ககரம் கூடி வருதலை வடமொழி இலக்கண அறிஞர்கள் 'க'ப்பிரத்தியயம் என்று கூறுவர். எனவே சதம் என்னும் சொல் கப்பிரத்தியயம் பெற்றுச் சதகம் என்று ஆயிற்று. நூறு கொண்டது சதகம். நூறு பாடல்கள் கொண்டதும் சதகம் என்றே பெயர் பெற்றது. தமிழிலுள்ள தொண்ணூற்றுறு சிற்றிலக்கியங்களுள் சதகமும் ஒன்று. சதக இலக்கியத்திற்கு முதன் முதலில் வித்திட்டவர் மாணிக்கவாசகர். திருவாசகத்தில் அமைந்துள்ள திருச்சதகம் சதக இலக்கிய வகைக்கு முன்னோடியாக அமைந்துள்ளது.

### தமிழிலுள்ள சதகங்கள்:-

பழமொழி விளக்கம் எனும் தண்டலையார் சதகம், செயங்கொண்டார் சதகம், கோவிந்த சதகம், கார்மண்டல சதகம், சோழமண்டல சதகம், தொண்டைமண்டல சதகம், கொங்குமண்டல சதகம், பாண்டி மண்டல சதகம், மழவ சதகம், அறப்பளீசுர சதகம், குமரேச சதகம், அண்ணாமலையார் சதகம், அருணாசல சதகம், அவையாம்பிகை சதகம், எம்பிரான் சதகம், திருவேங்கட சதகம், (மணவாள நாராயண சதகம்) சிவசங்கர சதகம், தில்லைக் கற்பக விநாயகர் சதகம், அகத்தீசர் சதகம், இயேசுநாதர் திருச்சதகம், இலக்குமிகாந்த சதகம், அரபிச் சதகம், ஈழமண்டல சதகம், உமாயேசுர சதகம், கந்தபுராண சதகம், கறுப்பண்ண சாமி சதகம், கைலாசநாதர் சதகம், பர்த்ருகரி நீதி சதகம், கோதண்டராம சதகம், எதிராச சதகம், திருச்செங்கோட்டுச் சதகம், வானமாமலைச் சதகம், நந்த மண்டல சதகம், அர்ச் தேவமாதா சதகம், சிற்சுகவாரிச் சாதகம், தசரதராம சதகம், திருவருட் சதகம், இராமாயண சதகம் விசுவகுல சதகம், தில்லைச் சிவகாமசுந்தரி சதகம், வடவேங்கட

நாராயண சதகம், காந்தி சதகம் முதலியவை தமிழிலுள்ள குறிப்பிடத் தக்க சதக இலக்கியங்களாகும். இவற்றுள் தண்டலையார் சதகம் செயங்கொண்டார் சதகம், கோவிந்த சதகம் ஆகிய மூன்றும் பழமொழியை அடிப்படையாகக் கொண்டவை. இம்மூன்று சதகங்களிலுள்ள ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொரு பழமொழி அமைந்திருப்பதைக் காணலாம். எனவே, இம்மூன்று நூல்களுக்கும் சேர்த்துப் பழமொழிச் சதகம் என்று பொதுப் பெயர் சூட்டினாலும் பொருந்தும்.

## தண்டலையார் சதகம்:-

தமிழ் மொழியிலுள்ள சில இலக்கியங்களுக்கு இரு பெயர்களும் இருக்கின்றன. அகநானூற்றை நெடுந்தொகை என்றும், திருமுருகாற்றுப்படையைப் புலவராற்றுப்படை என்றும் மலைபடுகடாத்தைக் கூத்தராற்றுப்படை என்றும், பெரியபுராணத்தைத் திருத்தொண்டர் புராணம் என்றும், சீவகசிந்தாமணியை மணநூல் என்றும் திருக்குறளை முப்பால் என்றும் (திருக்குறளுக்கு இன்னும் பல பெயர்கள் உண்டு) குறிப்பிடுவதைப்போலத் தண்டலையார் சதகத்தைப் பழமொழி விளக்கம் என்றும் குறிப்பிடுவதுண்டு. மூன்று சதகங்கள் பழமொழியை அடிப்படையாகக்கொண்டு தோன்றினாலும் பழமொழி விளக்கம் என்னும் சிறப்புப் பெயர் தண்டலையார் சதகத்திற்கு மட்டுமே உண்டு.

சோழ வளநாட்டைச் சேர்ந்த தஞ்சை மாவட்டத்திலுள்ள ஒரு பேரூர் திருத்துறைப்பூண்டி. இவ்வூர்ப் புகைவண்டி நிலையத்துக்கு வடக்கே இரண்டரைக் கல் தொலைவில் உள்ளது தண்டலைச்சேரி என்னும் ஊர். இவ்வூருக்கு அக்காலத்தில் தண்டலைநீள்நெறி என்று பெயர். இவ்வூரில் உறையும் இறைவன் (சிவன்) திருப்பெயர் நீள்நெறி நாதர். நின்றறிநாதர் எனவும் கூறுவர். தண்டலையில் எழுந்தருளியுள்ள இறைவனைத் தலைவராகக்கொண்டு நூறு பாடல்கள் பாடப்பெற்றதால் தண்டலையார் சதகம் என்றும், ஒவ்வொரு பாட்டும் உலகில் வழங்கும் பழமொழிக்கு விளக்கம் தரும் வகையில் அமைந்துள்ளதால் பழமொழி விளக்கம் என்னும் பெயர் ஏற்பட்டது. சில பாடல்களில் எடுத்துக்காட்டாகக் கதைகளும், எடுப்பான உவமைகளும் அமைந்துள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. இந்நூலாசிரியர் படிக்காசுப் புலவர். சிலர் சாந்தலிங்கக் கவிராயர் என்றும் கூறுவர். படிக்காசுப் புலவர் இயற்றிய மற்றொரு சதக நூல் தொண்டை மண்டல சதகமாகும்.

படிக்காசுப்புலவரின் காலம் 17ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியும் 18ஆம் நூற்ருண்டின் முற்பகுதியுமாகும். படிக்காசுப் புலவர் தமிழ் மணம் கமழுமாறு பாடுவதில் மிக வல்லவர் என்பதைப் பின்வரும் பாடலால் அறியலாம்.

மட்டாரும் தென்களந்தை படிக்காசன்
உரைத்ததமிழ் வரைந்த ஏட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும்
பரிமளிக்கும் பரிந்தவ் வேட்டைத்
தொட்டாலும் கைமணக்கும் சொன்னுலும்
வாய்மணக்கும் துய்ய சேற்றில்
நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே
பாட்டிலுறு நளினந் தானே.

இப்பாடலைப் பாடியவர் பலபட்டடைச் சொக்கநாதப்புலவர். இப்பாடல் கும்பன் என்னும் புலவரால் பாடப்பெற்றது என்பாரும் உளர். படிக்காசுப் புலவர் சந்தப் பாடல்கள் பாடுவதில் வல்லவர் என்பதை

வெண்பாவிற் புகழேந்தி பரணிக்குச்
செயங்கொண்டான் விருத்த மென்னும்
ஒண்பாவுக் குயர்கம்பன் கோவையுலா
அந்தாதிக் கொட்டக் கூத்தன்
கண்பாவு கலம்பகத்திற்கு இரட்டையர்கள்
வசைபாடக் காள மேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா
தொருவர் பகரொ ணுதே.

என்னும் தனிப்பாடலால் அறியலாம்.

தண்டலையார் சதகத்தில் இடம் பெற்றுள்ள நூறுபழமொழிகளும் உலக வழக்கில் உள்ளவை. மக்கள் அனைவர்க்கும் எளிதில் விளங்கக் கூடியவை. பொய் சொன்னுல் உணவு கிடைக்காது என்னும் நீதி 'பொய் சொன்ன வாய்க்குப் போசனம் கிடையாது' என்னும் பழமொழியாக வழங்கப்பட்டு வருவதைக் காணலாம். இப்பழமொழி கீழ்க் காணும் தண்டலையார் சதகத்துப் பாடலில் இடம் பெற்றிருப்பதை அறியலாம்

கை சொல்லும் பனைகாட்டும் களிற்றுரியார்
தண்டலையைக் காணுர் போலப்

பொய்சொல்லும் வாயினர்க்குப் போசனமும்
கிடையாது! பொருள்நில் லாது!
மைசொல்லும் கார்அளிசூழ் தாமைமலர்
பொய்சொல்லி வாழ்ந்த துண்டோ?
மெய்சொல்லி வாழாதான் பொய்சொல்லி
வாழ்வதில்லை மெய்ம்மை தானே!

உண்மையின் உயர்வும் பொய்யின் இழிவும் இப்பாடல் மிகத்தெளிவாக எடுத்துரைக்கின்றது.

சந்திரனைப் பார்த்து நாய் குரைத்தது போல
துறவிக்கு வேந்தன் துரும்பு
காற்றுள்ள போதே தூற்றிக்கொள்
எலி அழுது புலம்பினல் பூனை பிடித்து விடுமா?
நல்ல மாட்டுக்கு ஓர் அடி; நற்பெண்டிர்க்கு ஒரு வார்த்தை
அற்பனுக்கு வாழ்வு வந்தால் அர்த்த ராத்திரியில் குடை
பிடிப்பான்.
தன்வினை தன்னைச் சுடும் ஒட்டப்பம் வீட்டைச் சுடும்.
பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சாது
அரைக் காசுக்குப் போன மானம் ஆயிரம் பொன்
கொடுத்தாலும் வராது.

மேற்குறிப்பிட்ட பழமொழிகள் யாவும் தண்டலையார் சதகத்தில் இடம் பெற்றுள்ள, குறிப்பிடத்தக்க நல்ல பழமொழிகளாகும்.

## செயங்கொண்டார் சதகம்

பழமொழியை அடிப்படையாகக் கொண்டு எழுந்த மற்றொரு நூல் செயங்கொண்டார் சதகம். இந்நூல் 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த முத்தப்பச் செட்டியாரால் இயற்றப்பெற்றது. இவர் செட்டி நாட்டிலுள்ள கீழைச் சிவற் பட்டியில் பிறந்தவர். நாட்டுக் கோட்டைச் செட்டியார் வகுப்பைச் சேர்ந்தவர். செயங்கொண்டார் சதகம் நேம நகரத்தில் எழுந்தருளியுள்ள செயங்கொண்ட சோழீசர் மீது பாடப் பெற்றது. இந்நூலின் சிறப்பியல்பு என்னவென்றால் ஒவ்வொரு பாடலிலும் பழமொழி அமைந்திருப்பதுடன் அதை விளக்கும் வகையில் ஒரு கதையும் இடம் பெற்றிருப்பதேயாகும். எனவே செயங்கொண்டார் சதகத்தைப் பழமொழிச் சதகம் என்று குறிப்பிடுவதை விடப் பழமொழிக் கதைச் சதகம் என்று குறிப்பிடுவது மிகப் பொருத்தமாக இருக்கும். இராமாயணம், பாரதம் ஆகிய இரு இதிகாசங்களி

லும் இடம் பெற்றுள்ள பல்வேறு கதைகளும் புராணக் கதைகளும் செயங்கொண்டார் சதகத்தில் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன.

'தருமம் தலை காக்கும்' என்னும் பழமொழியை எடுத்துக்காட்டுடன் விளக்க விழைந்த ஆசிரியர், பாண்டவர்களின் அறநெறி வாழ்க்கையைச் சான்ருகக் காட்டுகின்ருர். இதோ அப்பாடல்:-

அருமைசெறி பாண்டவர்கள் பங்காளி
செய்கொடுமை யால்காடு ஆண்டும்
உரிமையுடன் தருமர்செய்த நன்றியினல்
திரும்பவும்வந் துவகை ஆண்டார்
பருவரையில் லாவளைத்த செயங்கொண்டா
ரேஎவரும் பண்பாய்ச் செய்த
தருமமே தலைகாக்கும் அதர்மம் அழித்
திடுமெனவுஞ் சாற்று வாரே.

(செயங்கொண்டார் சதகம் 3)

இவ்வாறு ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு கதையும் அதற்குப் பொருத்தமான ஒரு பழமொழியும் அமைந்திருக்கின்றன. செயங்கொண்டார் சதகத்தில் இடம் பெற்றுள்ள குறிப்பிடத்தக்க பழமொழிகளுள் சில பின் வருமாறு:-

கல்விக்கு அழகு கசடற மொழிதல் (1)
ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் (9)
புத்திமான் பலவான் ஆவான் (17)
வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் (22)
மந்திரம் கால் மதி முக்கால் (74)
சாகத் துணிந்தவனுக்குச் சமுத்திரமும் முழங்கால் (76)
எண் சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம் (84)
மூத்தது மோழை இளையது காளை (85)
தன்னலே தான் கெட்டால் அண்ணுவி என்ன செய்வான் (86)
துட்டனைக் கண்டால் தூர விலகு (95)

மேற்குறிப்பிட்ட பழமொழிகள் யாவும் பொதுமக்களிடையே பெருவழக்கில் உள்ளன என்பது சொல்லாமலே விளங்கும். செயங்கொண்டார் சதகத்தை இயற்றிய முத்தப்பச் செட்டியார் திருமுக விலாசம் செட்டியார் வரலாறு, செயங்கொண்ட சோழீசர் பிள்ளைத் தமிழ், பதிற்றுப்பத்தந்தாதி, கலித்துறையந்தாதி, நேமக்கலம்பகம், செயங்கொண்ட

சோமீசர் ஊற்றிருநாமம் முதலிய நூல்களையும் இயற்றியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**கோவிந்த சதகம்**

கோவிந்த சதகத்திற்கு வடவேங்கட நாராயண சதகம் என்னும் பெயரும் உண்டு. இந்நூல் திருமலையில் எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப்பெற்றது. இந்நூலின் ஆசிரியர் நாராயண பாரதி. இவர் 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். தண்டலையார் சதகம், செயங்கொண்டார் சதகம் ஆகிய இரு சதகங்களைப் போல இந்நூலும் பழமொழியை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது.

இறைக்க இறைக்க மணற்கேணி ஊறும். கல்விச் செல்வத்தைப் பிறர்க்கு அள்ளிக் கொடுக்கக் கொடுக்க மிகுமே தவிரக் குறையாது. இக் கருத்தைக் 'கொடுத்தால் குறைவராது' என்னும் பழமொழி மிகத் தெளிவாக உணர்த்துகிறது. இப்பழமொழி அமைந்த பாடலைக் கீழே காணலாம்.

எடுத்தாலும் ஊறும் இறைத்தாலும் ஊறும் இடைநடுவே
மடுத்தால் மறிபடு மோமணற் கேணித்தண் ணீரதுபோல்
அடுத்தாரை வாழ்விக்கக் கல்வியுண் டானவ ரன்புடனே
கொடுத்தாற் குறைவரு மோஅச்சு தாநந்த கோவிந்தனே.

இந்நூலிலுள்ள சில பழமொழிகள் பின் வருமாறு;-

ஆடு கொழுப்பது இடையனுக்கு லாபம்
உடும்பு போனால் போகட்டும் கையை விட்டால் போதும்
கங்கையில் மூழ்கினாலும் காக்கை அன்னமாகுமா?
கரும்பு ருசியென்று வேரோடு பிடுங்கலாமா?
குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே
கொடிக்குக் காய் கனமா?
தானே கனியாத காய் தடிகொண்டு அடித்தால் கனியுமா?
நாயைக் குளிப்பாட்டி நடுவீட்டில் வைத்தது போல.
மீன் குஞ்சுக்கு நீச்சுப் பழக்க வேண்டுமா?
முற்ற நனைந்தார்க்குக் குளிரில்லை.

மேற்குறிப்பிட்ட பழமொழிகள் யாவும் பொது மக்கள் நன்கறிந்தவை என்பது தேற்றம்.

# தமிழில் கால வேறுபாடு

**டாக்டர் மோ. இசரயேல்,**
தமிழ்த்துறை, மதுரைப் பல்கலைக் கழகம்.

## பெயரும் வினையும்

தொல்காப்பியனார் பெயருக்கும் வினைக்கும் இலக்கணக் கூறுங்கால் காலவேறுபாட்டினை ஒரு அடிப்படை இலக்கண அமைப்பாகக் கொண்டு, காலம் ஏற்காதது பெயர் என்றும், காலம் ஏற்பது வினையென வும் பாகுபாடு செய்கின்றார். அவர்

> 'பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
> தொழில்நிலை யொட்டும் ஒன்றலங் கடையே'' (தொ. சொ. 70)
> ''வினை யெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
> நினையுங்காலைக் காலமொடு தோன்றும்'' (தொ. சொ. 198)

என்னும் நூற்பாக்களில் இக்கருத்தினைப் புலப்படுத்துகின்றார்.

## காலவேறுபாடு

தொல்காப்பியனார் ''காலந்தாமே மூன்றென மொழிப'' (தொ. சொ. 199) என்று குறிப்பிட்டுத் தமிழில் காலவேறுபாடு மூவகைத்து என்று தெளிவுபடுத்துகின்றார். தொடர்ந்து ''இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா'' (தொ. சொ. 200) என்று கூறிக் காலம் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூவகையின என்பதைச் சுட்டிக் கூறுகின்றார். நன்னூலாரும் ''இறப்பெதிர்வு நிகழ்வெனக் காலம் மூன்றே'' (நன் 382) என்னும் நூற்பாவில் அவ்வாறே காலவேறுபாட்டினைக் குறிப்பிடுகின்றார்.

## 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று

காலம் மூன்று என்று கூறினாலும் தொல்காப்பியனார் மொழியில் தெளிவான வேறுபாட்டுடன் அமைகின்றவை இறப்பு, எதிர்வு ஆகிய இரு காலங்களுக்குரிய வினைகளே. தொல்காப்பியனார் நிகழ்காலத்தில் வழங்குகின்றதாகக் குறிக்கும் சொற்கள் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைகளே. அவற்றை ''நிகழுங்காலத்துச் செய்யும் என்னுங்கிளவி'' (தொ. சொ. 227) என்று கூறி அவை பல்லோர் படர்க்கை, முன்னிலை, தன்மை ஆகிய மூன்று இடங்களிலும் வழங்கா என்றும் வரையறுக்கின் றார். எனவே, நிகழ்காலத்தனவாகிய 'செய்யும்' என்னும் வாய்பாட்டு

வினைமுற்றுக்கள் படர்க்கை ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால் ஆகிய இடங்களில் மட்டுமே வழங்கின என்பது தெளிவு.

எ-டு: அவன் உண்ணும்
அவள் உண்ணும்
அது வரும்
அவை வரும்

தொல்காப்பியனார் நிகழ்காலத்தின என்று கருதுவது எல்லாம் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்களையே, ஆதலின் அவர் காலத்தில் படர்க்கை பலர்பால், தன்மை முன்னிலை ஆகிய இடங்களில் எவ்வகையான நிகழ்கால வினைகளும் வழங்கவில்லை என்பது தெளிவாகின்றது. கிறு, கின்று, ஆநின்று ஆகிய நிகழ்கால இடைநிலைகளைப் பெற்று வழங்கும் வினைகள் பிற்காலத்தனவே யாகும்.

தொல்காப்பியனார் காலத்தில் முக்காலத்தினும் ஒத்தியல் பொருளையும் (நன். 383) "நிகழுங் காலத்துச் செய்யும் என் கிளவி" யாலேயே செப்பினர் என்பதனை,

"முந்நிலைக் காலமும் தோன்று மியற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும்" (தொ.சொ.240)

என்னும் நூற்பாவில் தெளிவாகின்றது.

எ-டு: மலை நிற்கும்
திங்கள் இயங்கும்

எனவே தொல்காப்பியனார் காலத்தில் 'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்றுக்கள் நிகழ்காலத்திலும் இயல்புப் பொதுமைக்காலத்திலும் வழங்கின என்பது தெளிவு.

'செய்யும்' என்னும் வாய்பாட்டின் வடிவம் அமைந்த தொல்காப்பியனார் பயன்படுத்தும் என்மனார் (தொல். எழு. 6, 33) என்னும் வினையும், அவர் குறிப்பிடும் கொள்ளுமார், எள்ளுமார் (தொ. சொ. 207), செய்ம்மன (தொ. சொ. 227) போன்ற வினைகளும் சங்கஇலக்கியங்களில் வழங்கும் கொய்யுமோன் (புறம், 225) உண்மர் (பதிற். 24), காணுமோர் (பதிற்.83) போன்ற சொற்களும் இவண் ஒப்பு நோக்கத்தக்கன. இவற்றுள் சில (என்மனார், செய்ம்மன) வழக்கத்தைக்குறிக்கும் பொதுவான

காலத்தைக் காட்டுவனவாகவும் பிற நிகழ்வு எதிர்வு ஆகிய இருகாலப் பொதுமையுடையனவாகவும் வழங்கின என்பது தெளிவு.[1]

எனவே தொல்காப்பியனார் காலத்தில் ஐம்பால் மூவிடங்களில் வழங்கும் நிகழ்காலத்திற்குரிய வினைவடிவங்கள் வளர்ச்சி பெறவில்லை என்பது சாலப் பொருந்தும். ஆனால் ஐம்பால் மூவிடங்களிலும் இறப்பு நிகழ்வு ஆகிய இரு காலங்களிலும் வினைமுற்றுக்கள் தெளிவுற வேறுபாட்டுடன் வழங்கின என்பதைப் பின்வரும் சங்க இலக்கியச் சான்றுகளால் காட்டுதும்.

| | இறப்பு | எதிர்வு | நிகழ்வு |
|---|---|---|---|
| தன்மை ஒருமை | இருந்தேன் (புறம் 399) | இரங்குவேன் (புறம் 209) | —— |
| தன்மைப் பன்மை | ஆயினேன் (புறம் 141) | உண்குவேன் (புறம் 136) | —— |
| முன்னிலை ஒருமை | அறிந்தனை (புறம் 35) | ஆகுவை (புறம் 70) | —— |
| முன்னிலைப் பன்மை | இருந்தனிர் (புறம் 141) | ஆகுவிர் (புறம் 280) | —— |
| ஆண்பால் | அருளினன் (புறம் 395) | ஆகுவன் (புறம் 396) | செய்யும் |
| பெண்பால் | ஆயினள் (புறம் 348) | ஆகுவள் (புறம் 254) | செய்யும் |
| பலர்பால் | அமைந்தனர் (புறம் 65) | ஆகுவர் (புறம் 236) | —— |
| ஒன்றன்பால் | அமைந்தன்று (புறம் 395) | ஆவது (புறம் 63) | செய்யும் |
| பலர்பால் | கழிந்தன (புறம் 97) | ஆகுப (புறம் 7) | செய்யும் |

**பெயரெச்சம்**

மேலும் தொல்காப்பியனார் செய்த, செய்யும் என்னும் இருவகையான பெயரெச்ச வாய்பாடுகளையே தந்துள்ளார். (தொ. சொ. 222) 'செய்த' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் இறந்த காலத்திலும் 'செய்யும்' வாய்பாட்டுப் பெயரெச்சம் நிகழ்வு, எதிர்வு என்னும் இரு காலங்களிலும் வழங்கின எனலாம்.

1. மோ. இசரயேல்— "செய்யும்" என்னும் வாய்பாட்டு வினைமுற்று, தமிழ்ப்பொழில் துணர் 41 (1965), பக். 204-216.

தொல்காப்பியனுர் கூறும் வினைமுற்றுக்களும் பெயரெச்சங்களும் அந் நூல் இயற்றப்பட்ட காலத்தில் மொழியில் இறந்தகாலம் இறப்பல் லாக்காலம் (Non-past) ஆகிய இருவகைக் காலவேறுபாடுகளே வெளிப் படையாக அமைந்து கிடந்தன என்பது தெளிவாகின்றது. சங்க இலக் கியங்களில் வழங்குகின்ற வினை முற்றுக்களும் இதனை உறுதிப்படுத்து கின்றன எனலாம்.

பெரும்பாலான பெயரெச்சங்களும் இவ்விருவகைக் காலவேறு பாட்டிலேயே அமைவனவாக உள்ளன. ஆனல் எட்டுத் தொகையுள் பரிபாடல் சிலப்பதிகாரம் ஆகிய நூற்பாக்களுள் சில பெயர் எச்சங்கள் மூவகைக் காலவேறுபாட்டிற்கு வித்திடுவனவாக அமைகின்றன. இந் நூற்கள் சமயக் கருத்துக்களை மிகுதியாகக் கொண்டுள்ளமையாலும் வடமொழிச் சொற்கள் கலப்பு மிகுதியாகக் காணப்படுதலாலும் இவை பிற்காலத்தனவாக இருத்தல் வேண்டுமென்று அறிஞர் பலர் கருது கின்றனர். பரிபாடலில் சேர்கின்ற (பரி 22), சிலப்பதிகாரத்தில் உருள் கின்ற (29·1·10), ஊர்கின்ற (7.35), ஓசனிக்கின்ற (14 25) ஆகிய பெயர் எச்சங்கள் நிகழ்காலத்திற்கே உரியனவாய் அமைந்து கிடக்கின்றன. எனவே பெயர் எச்சங்களில் நிகழ்காலத்திற்கெனத் தனிப்பட்ட சொல் வடிவங்கள் கடைச்சங்க காலத்தின் பிற்பகுதியில்தான் தோன்றலாயின என்று அறிதும்.

### நிகழ்காலத்தின் வளர்ச்சி

பின்னர்க் காலப் போக்கில் பெயர் எச்சங்கள் செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் வாய்பாடுகளில் மூவகைக் காலவேறுபாடுகளுடன் மிகுதியாக வழங்கத் தொடங்கி விட்டன. தேவாரத் திருவாசகக் காலத் தில் 'செய்த' என்னும் வாய்பாட்டு நிகழ்காலப் பெயர் எச்சங்கள் முழு வளர்ச்சி பெற்று விட்டன எனலாம்.

எ-டு: வளர்கின்ற, மிளிர்கின்ற, ஒளிர்கின்ற, தெளிகின்ற
(திரு. நீத்தல் விண்ணப்பம் 3)

இக்காலத்தில் வினைமுற்றுக்களிலும் தனிவகையான நிகழ்கால வடி வங்கள் ஐம்பால் மூவிடங்களிலும் வழங்கலாயின.

எ-டு: மயங்குகின்றேன் (திரு. 62)
ஆழ்ந்திடுகின்றேன் (திரு. 81)

எவ்வாறேனும் கி. பி. 12-ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் வினைகளில் நிகழ்கால வடிவங்கள் முழுவளர்ச்சி அடைந்து மொழியில் பெருஞ்செல்வாக்கு அடைந்து விட்டன. எனவே பவணந்தி முனிவர் தமது நன்னூலில் வினைகளில் அமைகின்ற முக்கால இடைநிலைகளைப் பாகுபாடு செய்துள்ளார். தொல்காப்பியனார் கால இடைநிலைகளைப் பாகுபாடு செய்து தரவில்லையென்றாலும் அவர் காலத்தில் நன்னூலார் காலமொழியில் வழங்கின நிகழ்கால வினைகளைப் போன்ற சொற்கள் வழங்கவில்லை என்பது முன்னர்க்கூறப்பட்டது. நன்னூலார் த், ட், ற், இன் ஆகிய இறந்த கால இடை நிலைகளையும், கிறு, கின்று, ஆநின்று ஆகிய நிகழ்கால இடைநிலைகளையும் ப், வ் என்னும் எதிர்கால இடைநிலைகளையும் கூறுகின்றார்.

தொல்காப்பியனாரால் "நிகழுங்காலத்துச் செய்யும் என் கிளவி" நிகழ்காலத்ததாகக் கொள்ளப்பட்டது. ஆனால் அவர்காலத்திலும் சங்க காலத்திலும் அது பல அமைப்புக்களில் எதிர்காலத்தில் வழங்கத் தொடங்கி நன்னூலார் காலத்தில் "செய்யும் நிகழ்பெதிர்பும்" (நன்.144) குறிப்பிடும் அளவிற்கு நிகழ்வு எதிர்வு ஆகிய இருகாலங்களிலும் வழங்கினது என்பது தெளிவு.

தற்காலத் தமிழில் 'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்றுக்கள் எதிர்காலத்தில் மட்டும் வழங்குவதும் இவண் கருதத் தக்கது. எனவே நிகழ்காலத்திற்கெனத் தனிப்பட்ட வடிவங்கள் வளர்ச்சி பெறவே 'செய்யும்' வாய்பாட்டு வினைமுற்றுக்கள் எதிர்காலத்தில் மட்டுமே வழங்கத் தலைப்பட்டன என்பதில் தவறில்லை.

### காலவேறுபாடும் துணைவினைகளும்

பிற்காலத்தில் தமிழ்மொழியில் பல காலவேறுபாடுகள் அமையத் தொடங்கின. இதற்குப் பிறமொழித் தொடர்பும் வளர்ந்து வரும் கருத்துக்களை மொழியில் வெளியிட எடுத்துக்கொண்ட முயற்சியுமே காரணமாகும். தொல்காப்பியனார் காலத்தில் சிறப்பு - சிறப்பன்மை ஆகிய இருவகை வேறுபாடும், பின்னர் சிறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூவகை வேறுபாடும் பிற்காலத்தில் பல துணைவினைகளின் துணையால் பலவகைக் காலவேறுபாடும் மொழியில் அமைந்து கிடத்தலைக் காணலாம் [2]

2. மோ. இசரயேல் — துணைவினைகள், தென்மொழி சுவடி 2, ஓலை 12 (1965), பக். 64, 65.

தற்காலத் தமிழில் பின்வரும் வகைகளில் எல்லாம் காலவேறுபாடு அமைந்துள்ளது.

| | | |
|---|---|---|
| 1. | மூவகை | இடைநிலை |
| | இறப்பு வந்தான் | த், ற், ட், இன் |
| | நிகழ்வு வருகிறான் | கிறு, கின்று, ஆநின்று |
| | எதிர்வு வருவான் | வ், ப். |
| 2. | நிகழ்ச்சித் தொடர்ச்சியில் மூவகை | துணைவினை |
| | இறப்பு வந்துகொண்டிருந்தான் | "கொண்டு இரு" |
| | நிகழ்வு வந்துகொண்டிருக்கிறான் | ,, |
| | எதிர்வு வந்துகொண்டிருப்பான் | ,, |
| 3. | நிகழ்ச்சி முடிவுற்றதைக் குறிப்பதில் மூவகை | துணைவினை |
| | இறப்பு வந்திருந்தான் | 'இரு" |
| | நிகழ்வு வந்திருக்கிறான் | ,, |
| | எதிர்வு வந்திருப்பான் | ,, |
| 4. | வழக்கத்தைக் குறிக்கும் மூவகை | துணைவினை |
| | வாழ்ந்து வந்தான் | "வா" |
| | வாழ்ந்து வருகிறான் | ,, |
| | வாழ்ந்து வருவான் | ,, |
| 5. | நிகழ்ச்சியின் உறுதியைக் குறிக்கும் வகைகள் | துணைவினை |
| | வந்தாயிற்று | "ஆ" |
| | மறைந்து போயிற்று | "போ" |
| | வந்துள்ளது | 'உள்" |
| | கண்டுவிட்டான் | 'விடு" |
| | அடித்துப் போட்டான் | 'போடு" |

இவை வேறுபட்ட பொருட்களில் வழங்குதலையும், பல இடங்களில் முக்கால வேறுபாட்டில் வழங்குதலையும் மொழி வழக்கில் காணலாம். மேற்கொடுக்கப்பட்டிருக்கும் துணைவினைகள் வேறு செயலைக் குறிக்காமல் வினையின் கால வேறுபாட்டைக் குறிக்கத் துணைபுரிகின்றன. இவ்வாறு துணைவினைகள் இணைந்து அமையும் கூட்டு வினையடிகள் சங்க இலக்கியங்களில் மிக அருகியே காணப்படுகின்றன. வடமொழி, ஆங்கிலம் ஆகிய பிறமொழித் தொடர்பாலும் காலப்போக்கில் வளரும் கருத்துக்களைத் தடையின்றி வெளியிடும் முயற்சியாலும் வினையின் நுட்பமான காலவேறுபாடுகளை மொழியில் அமைக்கத் துணைவினைகள் பயன்படுத்தப்படுகின்றன. வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பல வகையான காலவேறுபாடு அமைந்துள்ளமையும் இவண் நோக்கத்தக்கது.

# வள்ளுவர் வாழ்த்து

(நல்லைக்கவி அ. இளங்கோவன்)

வள்ளுவன் என்னும் பேரில் மறப்பிலா துலகம் வாழ்த்தும்
தெள்ளிய புலவோய் நின்னைச் சிறியனேன் வாழ்த்து கின்றேன்
பள்ளநீர் உவரி சூழ்ந்த பாரினிற் புகழின் செல்வம்
உள்ளவ னாகு கென்றாய் உன்னுரைச் சான்று மானாய்!

(2)

நின்றனைப் பெற்றோர் தாமே நிகரிலா துயர்ந்த பெற்றோர்
நன்றுயர் தவமும் செய்தார் நற்பெரும் பேறும் பெற்றார்
நன்றிபா ராட்டி யிந்த நானிலம் அவர்கள் தம்மை
என்றுமே போற்று மய்யா ஈடிலாப் புலவ ரேறே!

(3)

கண்டெனும் மொழியி னாலே காலமெல் லாமும் காணும்
திண்டிறற் குறள்நூல் தன்னைச் செய்தளித் திட்ட நீதான்
தண்டமி ழன்னை செய்த தவப்பய னானாய்! என்றும்
வண்டமி ழகச்சி றப்பை வளர்ப்பவன் தானு மானாய்!

(4)

அறம்பொரு ளின்ப மென்றிங் காகிய மூன்று பாலும்
திறம்பெறச் செய்து தந்தாய் தீங்கனி மூன்று போல!
அரும்பிடும் மக்கட் கூட்டம் அவைகளை யுண்டுண் டுண்டே
பெறும்பயன் எடுத்துச் சொல்லிப் பேசுதல் ஒண்ணா தப்பா!

(5)

தெள்ளமு தந்தா னென்கோ செம்மணிக் குவைதா னென்கோ
கள்ளமில் லாத ஞானக் கற்பகம் அதுவே யென்கோ
ஒள்ளிய கலைநி றைந்த ஒருகரு வூலம் என்கோ
வள்ளுவா நீவ குத்து வைத்தவோர் குறள்நூல் தன்னை!

(6)

உயிர்தமிழ் நாட்டுக் குன்றன் ஒருபெரும் நூலே யாகும்
செயிர்தனைக் காணா வுன்றன் செந்தமிழ் நூலே சொல்லாம்
பயிர்தனை வளர்விக் கின்ற பக்குவக் கழனி யாடும்
தயிர்தமிழ்ச் சொல்லுக் குன்னூல் தான்பிற மோர்ப்பெ ருக்கே!

(7)

எத்தனை காலத் தின்முன் இயற்றினை யுனது நூலை!
புத்துரை யென்ன இன்றும் புதுமையே காட்டுகின்ற
அத்தமிழ் நூலி னாற்றல் அளவிடப் படுமோ ஐயா
வித்தகத் துனக்கொப் பில்லை மேதினிக் கொருவ னானாய்!

(8)

புலவராய்த் தோன்றி னோரிப் பூமியில் எண்ணற் றோர்கள்
சிலரவர் தம்மில் மிக்குச் சிறப்பினை யெய்தி னார்கள்!
தலைவன்நீ யவர்கட் கெல்லாம்! தக்கது சொன்ன தாலே
நிலவுவ தாமுன் பேரே நேமியி னுள்ள மட்டும்!

(9)

தாய்த்தமிழ் நாட்டுக் குன்போல் தகுந்ததோர் தொண்டு தன்னைச்
சேய்த்திறன் காட்டு மாறு செய்திட வேண்டும்! இன்றேல்
நாய்த்தகை தானு மற்ற நரப்பதர் ஆவே னப்பா!
வாய்த்தவா றொருநற் றொண்டை மாண்புறச் செய்கு வேனே!

(10)

உன்னையே போல நானும் ஒருபெரும் புலவோ னாக
அன்னையே நின்ன தாசி யருள்கவென் றாசை மீக்கூர்ந்
தென்னையே தடுத்தாட் கொண்டிங் கேற்றமும் அளிக்குந் தூய
பொன்னையே நிகர்த மிழ்த்தாய்ப் பூங்கழல் போற்று கின்றேன்.

# தமிழ் வளர்த்த மேலைநாட்டுப் பன்மொழிப் புலவர் - கால்டுவெல்*

[ ரு. மீ. டயசு, I. P. S. சென்னை ]

மொழி என்பது ஒரு சமுதாயத்தின் பண்பாட்டிற்கு ஏற்ப மக்கள் தங்கள் எண்ணங்களைப் பரிமாறிக்கொள்ள வகுத்த ஒரு வழிமுறை என்று கருத வேண்டும். எண்ணங்களின் ஊர்தியாகிய மொழி, அந்த எண்ணங்களின் எழுச்சியோடு தானும் வளர்ந்து, உயர்ந்த கருத்துக்களைத் தோற்றுவித்து இலக்கியச் சிறப்பைப்பெறுவது இயல்பு. இவ்வாறு பழங்கால உலகின் பல்வேறு பகுதிகளில் பண்பாட்டில் வளர்ச்சி பெற்ற பல முதுகுடிகள் ஆங்காங்கு எபிரேயம், கிரேக்கம், இலத்தீன், சம்சுகிரதம், தமிழ் முதலியபண்பட்ட மொழிகளுக்கு உரியராகவாழ்ந்து வந்தனர் என்பது வரலாற்றிலிருந்து தெரியவருகின்றது. ஆனால் எபிரேயமும், இலத்தீனும், கிரேக்கமும், சம்சுகிருதமும் இறந்துபட்ட மொழிகளாக இன்று காணப்படும் நிலையிலும், தமிழ் மொழியானது, அன்று இருந்தது போலவே இளமையும், எழிலும், வலிமையும் ஒருங்கே அமைந்திருப்பது கன்னித் தமிழின் தனிச் சிறப்பு. 2000 ஆண்டுகளுக்கு முன்னரே தொல்காப்பியமும், திருக்குறளும், சிலப்பதிகாரமும் தந்த தமிழ் மொழி, அன்றும் பண்பட்ட, இனிய, இலக்கிய இலக்கணச் சிறப்புடைய மொழியாக இருந்தது; அவ்வாறே இன்றும், அதிக மாற்றமின்றித் தனித்துநின்று மூன்று கோடித் தமிழ்மக்களின் பண்பாட்டிற்கும், எண்ண வளர்ச்சிகளுக்கும் ஒத்த உயிருள்ள மொழியாகத் திகழ்கின்றது

தமிழ் மொழியின் மூத்த நூலாகிய தொல்காப்பியத்தையும், கடைச் சங்க காலத்தின் இலக்கியங்களையும், மற்றும் இடைக்கால, கடைக்கால நூல்களையும் கற்றுத் தேர்ந்து, கவிதையும், காவியங்களும், இலக்கணமும் விளக்க நூல்களும் இயற்றிய பெரியார்கள் பலர் தமிழ் நாட்டில் அவ்வப்போது தோன்றியிருப்பினும், தமிழ்மொழியின் அமைப்பைப் பற்றிச் சிறப்பாக ஆராய்ந்து, அதனை மற்ற திராவிட மொழிகளோடு ஒப்பிட்டும், மொத்தத்தில் உலக மொழிகளிடையே திராவிட மொழிகளுடையவும், தமிழுடையவும் இடத்தை ஒழுங்கான முறையில் அறுதியிடவும் முன்வந்தனர் ஒருவரும் இலர். இந்தப் பணியைத் தமிழ் மொழிக்குச் செய்த பெருமை மேலைநாட்டிலிருந்து 19-ஆம் நூற்றாண்

* திருச்சி வானொலியிற் பேசிய பேச்சு. (16—3—68)

டில் தமிழ்நாட்டிற்கு மத போதகராக வந்து, தமிழ்நாட்டிற்கும், தமிழ் மொழிக்கும் சீரிய சேவை செய்த பேராயர் ராபர்ட் கால்டுவெல் அவர் களையே சாரும். மேலை நாட்டிலிருந்து தமிழ்நாடு போந்து, தமிழ் மொழி வளர்த்த வீரமாமுனிவர் போன்ற பேரறிஞர்களின் வரிசையிலே தோன்றியவர் அவர். அன்னார் இயற்றிய “தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம்” என்னும் பெயர்பெற்ற மொழிநூலே இன்னும் பன் மொழிப் புலவர்களின் பயிற்சிக்கும், ஆராய்ச்சிக்கும் அடிப்படை நூலாகத் தொடர்ந்து நிலைத்துநிற்கின்றது.

கால்டுவெல் அயர்லாந்து தேசத்தில் கிளாடி என்ற ஆற்றங்கரைச் சிற்றூரில் 1814-ஆம் ஆண்டில் பிறந்தவர். இளம் வயதிலேயே கல்வி கேள்விகளில் திறன் மிக்க வல்லுநராகக் காணப்பட்டார். சுகாட் லாந்து தேசத்தைச் சேர்ந்த எடின்பரோ பல்கலைக்கழகத்தில் உயர்கல்வி பயின்றூர். கல்லூரிப் படிப்பு முடிந்தவுடனேயே இறைவன் பணியில் ஈடுபடத் துணிந்து, தென்தமிழ் நாட்டிற்கு வேத போதகராக வந்து சேர்ந்தார். தாம்பிரபரணி ஆறு பாயும் பொருநை நாடென்னும் திருநெல்வேலியில் தனது சமயப் பணியைச் செய்துவந்தார். இடையங் குடி என்ற சிற்றூரில் அவருடைய இல்லம் அமைந்திருந்தது. நாகர் கோவிலில் வேத விளக்க நூல்களை அச்சிட்டு வெளியிடும் பணி செய்து வந்த மறைப் பெரியாரின் மகளான எலிசாமால்து என்னும் வனி தையை அவர் மணந்து மனையறம் நடத்தி, மறைப் பணியும் தமிழ்த் தொண்டும் ஒருங்கே செய்து வந்தார்.

இளமைப் பருவம் தொட்டே, நல்ல பன்மொழிப் புலமையும் இலக் கிய ஆர்வமும் பெற்றிருந்த கால்டுவெல் தமிழ்நாட்டிற்கு வந்தபொழுது, மத போதகத் துறையிலுள்ள அவருடைய நண்பர்களும் நல்ல தமிழ றிஞர்களாக இருந்தனர். திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பெருமை பெற்ற ‘போப்’ என்னும் தமிழ்ப் பெரியாருடைய வும், கிருத்துவ சமய முதல் நூலான பைபிளைத் தமிழ்ப்படுத்திச் சிறப் பெய்திய ‘பவர்’ என்ற அறிஞருடையவும், சிறந்த தமிழகராதி ஒன் றைத் தொகுத்துப் புகழோடு விளங்கிய ‘வின்சுலோ’ வுடையவும், நட்புறவுபெறும் சூழ்நிலை இவருக்குக் கிட்டியது. இதுவன்றி வேத நாயக சாத்திரியார்போன்ற உள்ளூர்த் தமிழ்ப் பெரியார்களின் கேண்மை யும், கால்டுவெல் அவர்களுடைய தமிழ் ஆர்வத்தை ஊக்குவித்து, வளர்த்துத் தமிழ் ஆராய்ச்சியில் ஈடுபடச் செய்தது. இதன் பயனாக எழுந்த நன்னூலே “தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம்” என்ற மாபெரும் மொழி நூல். இது தவிர, திருநெல்வேலி வரலாறு, இன்னும்

மத நூல்கள் பல கால்டுவெல் எழுதியிருக்கின்றார். ஆனால் மொழி ஆராய்ச்சித்துறையில், திராவிடமொழிகளின் பன்மொழிப் புலமையிலே, அன்னாருக்கு ஒப்பாரும் மிக்காரும் இலரென அன்றும் இன்றும் சொல்லத்தக்க வகையில், கால்டுவெல் பெரியாரின் புகழை நிலை நிறுத்தியது அவரது "ஒப்பிலக்கண" நூலேயாகும். இந்நூல் முதல் முதலாக 1856-ஆம் ஆண்டு அச்சிடப்பட்டது. அதன் பிறகு இரண்டு முறை மீண்டும் வெளியிடப்பட்டிருக்கின்றது.

கால்டுவெல் காலத்திற்கு முன் பாரத நாட்டில் பரவியிருந்த மொழிகள் எல்லாம் இந்து-ஆரிய வகுப்பைச் சேர்ந்தவை என்று ஐரோப்பிய மொழி நூல் அறிஞர்கள் பொதுவாகக் கருதி வந்தார்கள். 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் டாக்டர் காட்குசுன் என்பவர் முதன் முதலாக இந்து-ஆரிய வகுப்பைச் சேராத மொழிகள் பாரதத்தில் உண்டு என்னும் கருத்தை வெளியிட்டார். அதன் பிறகு டாக்டர் குண்டெர்ட் என்ற செர்மானியப் புலவர் மலையாள மொழியையும், பேரறிஞர் கிட்டெல் என்பவர் கன்னட மொழியையும், பேராசிரியர் பிரௌன் என்பவர் தெலுங்கு மொழியையும் செவ்வனே ஆராய்ந்து, துருவிப் படித்து ஆராய்ச்சி நூல் எழுதினர். இந்நிலையில் தமிழ் மொழியை நன்கு கற்றுத் தேர்ந்திருந்த பன்மொழிப் புலவர் கால்டுவெல், மேற்சொன்ன மூவருடைய ஆராய்ச்சியையும் பயன்படுத்திக்கொண்டு, "தென்னிந்தியமொழிகளின்ஒப்பிலக்கணத்தை' இயற்றித் தந்தார். இளமையிலேயே அவர் பெற்றிருந்த பிரெஞ்சு, இலத்தீன், கிரேக்க மொழிகளின் ஞானம் அவருக்கு இந்தப் பணியைத் திறம்படச் செய்யும் ஆற்றலைத் தந்தது.

ஒரு மொழி இன்னொரு மொழியோடு தொடர்புடையது என்னும் முடிவை அறிஞர் ஒத்துக்கொள்ளும் வகையில் எடுத்துக்காட்டுவதற்கு அம்மொழிகளிலுள்ள அடிப்படைச் சொற்களின் வேர்ப் பகுதிகள் ஒற்றுமை உடையனவாக இருக்க வேண்டும். அதுவன்றி மொழிகளின் இலக்கண அமைப்பிலும் பல வகைகளில் ஒருமைப்பாடு தெரியப்பட வேண்டும். அப்படி இருந்தால்தான் உண்மையான தொடர்பு இருக்கின்றது என்று கருதலாமே தவிர, வெளித் தோற்றத்தில் ஏதோ ஒரு சில வார்த்தைகள் ஒத்திருக்கின்றன அல்லது ஒன்றிரண்டு இலக்கண முறைகள் இரு மொழிகளிலே கையாளப்படுகின்றன என்பதை மாத்திரம் வைத்துக் கொண்டு மொழித்தொடர்பை நிர்ணயிப்பது ஆராய்ச்சி முறையாகாது இப்படிச் சரியான முறையிலே திறம்பட ஆராய்ச்சி செய்த அறிஞர் கால்டுவெல், தமிழோடு சேர்ந்த திராவிட மொழிகள், வட மொழிகளிலிருந்து தனிப்பட்ட தோற்றமும் வரலாறும் உள்ள

புராதன மொழிகள் என்றும், அவற்றிற்கு மத்திய ஆசிய பகுதியைச் சேர்ந்த சித்திய மொழிகளோடு இருக்கும் தொடர்பு இந்து-ஆரிய மொழிகளோடு காணப்படும் தொடர்பைவிட அதிகமானது என்றும் முடிவு கட்டியிருக்கின்றார். அவருடைய முடிவுகளில் பெரும் பகுதிகள் இன்றும் மிகுந்த அளவில் ஒத்துக்கொள்ளக்கூடியவை என்பதில் ஐயமில்லை.

"திராவிடம்" என்ற சொல்லுக்கு அறிஞர் கால்டுவெல் தரும் விளக்கம் மிகப் பொருத்தமாக அமைந்திருக்கின்றது. "திராவிடம்" முதலில் "திரவிடம்" என்று குறுகி, பிறகு "திரமிடம்" என மாறியதற்குக் கால்டுவெல் ஆதாரம் தருகிறார். கி. பி 1573-ஆம் ஆண்டில் தாரநாதர் எனபவரால் திபெத்தில் எழுதப்பட்ட "இந்தியாவில் புத்த மத வளர்ச்சி" என்ற நூலில் "திரமிளம்" என்ற வார்த்தை காணப்படுகிறது. இதைத் திரமிடத்தின் மரூஉ என்று கொள்ளலாம். மலையாள மொழியில் உள்ள புராணங்களிலும் இவ்வுருவம் காணக்கிடப்பதாக டாக்டர் குன்டெட்டின் குறிப்புகளில் சொல்லப்படுகிறது. இலங்கை நாட்டு மகாவம்சத்தில் 'திரமிளம்' என்பது 'தமிழோ' என்று வழங்கப்பட்டிருப்பதாகக் காணப்படுகிறது. "சிரமணம்" என்ற வட சொல் "சமணம்" என்று திரிந்ததுபோல் "திரமிளம்" என்ற சொல் "தமிழோ" என மாறி அதன் பிறகு "தமிழ்" என்று வழங்கியதாக ஊகிக்கப்படுகிறது. ஆகவே 'திராவிடம்' என்ற பொது மொழிப் பெயரே "தமிழ்" என்று திராவிடத்தின் அடிப்படை மொழிக்கு வந்ததாகக் கால்டுவெல் ஆராய்ச்சியின் பயனாகத் தெரிகிறது.

இதனாலும், அடிப்படை வேர்ச் சொற்களின் தோற்றம் இலக்கண அமைப்பு முறைகளை ஆராய்ந்ததன் பயனாகவும், திராவிட மொழிகளின் அனைத்திலும் தமிழே பழமை வாய்ந்தது என்பது தெளிவாகும். ஆயினும் திராவிட மொழியின் மூல மொழி வடிவங்களை ஆராயும்போது, இத்தகைய சில மூல வடிவங்கள் மலையாளத்திலும், துளுவிலும், கன்னடத்திலும், தெலுங்கிலும், ஏன், கோந்து என்று சொல்லப்படும் மத்திய பிரதேச மொழியிலும், பிராகவி என்று சொல்லப்படும் பாகிச்தான் குவெட்டா 'பிரதேச மொழியிலும் வைத்துக் காப்பாற்றப்படுவதைக் காணலாம். ஆகவே திருந்திய திராவிட மொழிகளான தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளு, குடகு என்ற ஆறு மொழிகளும், திருந்தாத திராவிட மொழிகளான தூதம் கோதம், கோந்து, கந்தம், ஒராவோன், ராச்மகால் என்ற ஆறு மொழிகளும் இதற்கும் மேலாக

பிராகூவி என்ற தூரகுவெட்டாப் பகுதியைச் சேர்ந்த ஒரு மொழியும், ஆகமொத்தம் பதின்மூன்று மொழிகளும், திராவிடகுடும்பத்தைச் சேர்ந்தவைஎன்று பேரறிஞர் கால்டுவெல் முடிவுசெய்திருக்கிறார். அதிலிருந்து திராவிடர் நாகரிகம் ஒருகாலத்தில் குமரி முதல் வேங்கடம் வரை மாத்திரம் அன்று, மத்திய இந்தியாவையும், இமயச் சாரலையும் அடைந்து, மேற்கே சிந்துநதி தீரம் தாண்டிக் குவெட்டா வரையில் சென்று இருந்தது என்பது தெளிவாகிறது. இதற்கு வரலாற்றுச் சான்றாக மோகன்சதாரோ சுரங்கங்களிலிருந்து திராவிட வரலாற்றுச் சின்னங்களும், மற்றும் புதைபொருள்களும், கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன.

9. மொழிகளின் வளர்ச்சியையும் அவற்றின் சிறப்பையும் ஆராய்ந்த வல்லுநர்கள் பலர், கருத்துக்களைத் தனித்தனியே படங்களாக எடுத்துக்காட்டும் மொழிகள் முதலாவதாக ஏற்பட்ட மொழிகள் என்றும், அதன் பிறகு ஒருசில வடிவங்களைக் கொண்டு தொடர்புள்ள கருத்துச்சேர்க்கையை முறைமுறையாகக் குறிக்கும் வகையில் ஏற்பட்ட மொழிகள் பண்பட்ட மொழிகள் என்றும், பின்னர் எண்ணங்களை நல்ல முறையில் விளக்குவதற்கு ஒலிஅமைப்புக்களையும், சொல்லமைப்புக்களையும், இலக்கண அமைப்புக்களையும், அடுக்கடுக்காகச் சேர்த்து வகைப்படுத்திச் சொல்வது பல நல்ல மொழிகளின் அம்சங்களாக அமைந்தது என்றும், இன்னும் பிற்காலத்தில் ஏற்பட்டன வேர்ச் சொற்களையும் மாற்றிக் கருத்துக்களைத் தெளிவுபடுத்தும் மொழி முறைகள் என்றும் கருதுகின்றனர். இலத்தீனும், சமசுகிரதமும் நான்காவது வகுப்பைச் சார்ந்தவை என்றும், தமிழ் மூன்றாவது வகுப்பைச் சார்ந்தது என்றும் மொழிநூல் அறிஞர்கள் கூறுவர். அதில் எதுஉயர்ந்தது, எதுதாழ்ந்தது என்று சொல்வதற்கில்லை. ஒவ்வொரு நிலப்பரப்பிலும் அங்குள்ள சமுதாயத்தின் தேவைக்கும், பண்பாட்டிற்கும் எண்ண எழுச்சிகளுக்கும், இலக்கிய மரபுகளுக்கும் ஏற்ப மொழி மாற்றங்கள் தோன்றின. குறுகிய வேர்ச்சொற்களை அதிக ஒட்டின்றிப் பயன்படுத்தும் மொழிகள் மேம்பட்டவை என்பர் சிலர். தமிழ் வேர்ச் சொற்கள் மிகக் குறுகியவை ஆனால் நம் மொழியில் ஒட்டுமுறையைச் சிறிது அதிகமாகவே பயன்படுத்துகிறோம். ஆயினும் உயர்ந்த கருத்துக்களைப் பண்பட்ட முறையில் பொருள் வேறுபாடின்றி எழிலுடன் எடுத்துச் சொல்லக்கூடிய சிறப்பே மொழியின் சிறப்பு. அச்சிறப்பு திருக்குறள் தந்த நம் தமிழ் மொழிக்கு என்றுமே உறுதியாக உண்டு.

வேற்று மொழியினராகப் பிறந்து, கிறித்துவ மறைத் தொண்டராகத் தமிழகத்துக்கு வந்து, தமிழின் இனிமையையும், பழமையையும்,

பொருட்செறிவையும், நன்கறிந்து தமிழ்த் தொண்டாற்ற முற்பட்டுத், தமிழ் மகனாக மாறிய கால்டுவெல் என்னும் பேரறிஞர் எடுத்துச் சொன்ன பிறகுதான் நம் கன்னித் தமிழின் பெருமையைத் தமிழராகிய நாம் அனைவரும் உணரலானோம். உலகினரும் உணர்ந்து போற்றத் தொடங்கினார்கள். அன்னார் "திராவிட மொழியின் ஒப்பிலக்கணம்" என்ற நூலைப் படைத்த பின்னரே, நம் நாட்டிலேயும் பலர் தமிழ்மொழி ஆராய்ச்சியில் ஈடுபடத் தொடங்கினர். ஒரு நூற்றாண்டுக்கு முன் கால்டுவெல் ஆரம்பித்த நற்பணியே சென்ற சனவரி மாதம் சென்னையிலே நடந்த உலகத் தமிழ் மாநாட்டில் நிறைவுபெற்றது என்று சொன்னால் மிகையாகாது அந்த மாநாட்டிலே தமிழ்நாட்டிலிருந்தும், தமிழர்கள் சென்று குடியேறிய ஈழம், மலேயம், போன்ற பல நாடுகளிலிருந்தும், இன்னும் பிரான்சு, சப்பான், அமெரிக்கா, செர்மனி, சுவிட்சர்லாந்து போன்ற அந்நிய நாடுகளிலிருந்தும், தமிழ் ஆராய்ச்சி செய்த அறிஞர்கள் பலர் கூடித் தமிழ் அன்னைக்கு அஞ்சலி செய்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

தமிழ்ப்பெரியார் ராபர்ட் கால்டுவெல் 1892-ஆம் ஆண்டு பழனியிலே இப்பூதவுடலைப் பிரிந்தார். அவருடைய சமாதி இன்றும் இடையங்குடி தேவாலயத்தில் அவருடைய மதத் தொண்டுக்குச் சின்னமாக விளங்குகின்றது. சமீபத்தில் உலகத் தமிழ் மாநாட்டின்போது, தமிழை வளர்த்த பல பெரியார்களின் சிலைகளோடு, தமிழ்ப் பேரறிஞர் கால்டுவெல் அவர்களின் சிலையும் சென்னை மெரினா கடற்கரையில் அமைத்தது, தமிழர்கள் இப் பெருமகனார் பேரில் கொண்டுள்ள நன்றிக்கும், மரியாதைக்கும் சிறந்த அறிகுறியாக அமைந்தது என்று சொல்லலாம். அந்நிய நாட்டிலிருந்து வந்த ஒருவர் தமிழை இவ்வளவு சிறப்பாகக் கற்றுத் "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" போன்ற ஒரு சிறந்த நூலை இயற்ற முடியுமானால், தமிழராகப் பிறந்த நமக்கு அவ்வளவு ஆர்வம் இல்லாது போவது ஏன் என்று நம்மில் ஒவ்வொருவரும் கேட்டுக் கொள்ள வேண்டும். பேரறிஞர் கால்டுவெல் தமிழர்களுக்குப் படிப்பித்த தலையாய பாடம் இது!

---

# தமிழ் வளர்க்கும் சங்கம்

"இலட்சுமி"

[குறிப்பு:— ஆனந்த விகடன் 21—12—59வார இதழில் வெளியானது. விகடனுக்கு எம் நன்றி.]

சந்தடி நிறைந்த கடைத் தெரு, நெரிசலான போக்கு வரத்து, பாட்டும் பேச்சும் கேட்கும் ஒலிபரப்பும் கருவிகள், இவ்வளவிற்கும் நடுவே ஓர் அமைதியான இடம் மதுரையில் இருக்கிறது. நிழல் பரப்பும் மரத்தின் தண்மைக்கும் பழங்காலத்து முறையில் கட்டப்பட்ட கம்பீரமான கட்டடத்துக்கும் நடுவே அங்கே தமிழின்பம் நுகர்ந்து கொண்டிருக்கிறார்கள். நூற்றுக் கணக்கான மாணவிகளும் சில மாணவர்களும்.

இஃது ஒரு கலைக்கூடமா? கல்லூரியா? சந்தேகம் வேண்டாம் தான். இதுதான் மதுரைத் தமிழ்ச் சங்கம். மதுரையைப் பொறுத்தவரை, அன்று முதல் இன்றுவரை மீனாட்சி அம்மன் கோவிலுக்கு அடுத்தபடியாகத் தொன்மையும் பெருமையும் பெற்று விளங்குகிற இடம் இதுதான்.

உள்ளே நுழையும் போதே பாண்டித் துரைத் தேவர், வ. உ. சி., பாரதியார், சீனிவாச ஐயங்கார் ஆகியவர்கள் நம்மை வரவேற்கிறார்கள். திருவள்ளுவர் புன்னகை புரிகிறார். மேலேபோக மனமில்லாமல், அந்த ஆள் உயர அழகு ஓவியங்களிடையே நிற்கிறோம். திருவள்ளுவரைச் சுற்றி இருக்கும் பாதுகாக்கப்பட்டு வைத்துள்ள பழங் காலத்து ஓலைச் சுவடிகளைப் பார்த்தபடி, தமிழ் வளர்த்த அந்தக் காலத்துச் சங்கத்தின் நினைவுகளில் ஒன்றிவிடுகிறோம். 'டப் டப்' என்று டைப் செய்யும் இயந்திரத்தின் ஒலிதான் நம்மை மறுபடி அந்த நினைவுகளிலிருந்து விடுவிக்கிறது.

கண்ணாடி அலமாரிகளுக்குள் அரிய தமிழ்ப் புத்தகங்கள் வரிசை வரிசையாகத் தெரிகின்றன. அவற்றை நாடிப் படிக்கும் பெண்களின் வரிசையும் தெரிகிறது. அதற்கு அப்பால் கட்டடம் கொள்ளாமல், வெளியே கூரைப் பகுதிகளிலும்கூட வகுப்புக்கள். ஆமாம். இவர்கள் தாம் நமது எதிர்காலத் தமிழ்ச் செல்விகள்.

தமிழ்த் தாயைத் தொட்டிற் பருவத்திலிருந்து தாலாட்டிய பெருமை மதுரைக்கு உண்டு. பாண்டியர்களின் முதல் தலைநகராக விளங்கிய தென்மதுரையில்தான் முதல் தமிழ்ச் சங்கம் தோன்றி வளர்ந்தது. இது சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தென் மதுரையைக் கடல்கொண்டு அழித்துவிட்ட பிறகு, பாண்டியர்களுக்குத் தலைநகராக விளங்கியது, கபாடபுரம். இங்கே வளர்ந்ததுதான் இரண்டாவது தமிழ்ச்சங்கம். தொல்காப்பியம் தோன்றியது இங்கேதான். இத் தலைநகரும் கடலால் அழிவுற்று, மூன்றாவது தலைநகராக உருவானது தான் இப்போது இருக்கும் மதுரை. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில், சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக அரங்கேறி இன்று நமக்குக் கிடைத்துள்ள தமிழ்ச் செல்வம், திருக்குறள்.

கடைச் சங்கம் மறைந்துபோன பிறகு, சிற்றரர்களும், சில பேரரசர்களுமாகத் தமிழைப் போற்றி வந்தார்கள். நாயன்மார்களும், ஆழ்வார்களும் தெய்வத் தமிழில் இறைவனைப் புகழ்ந்து பாடினார்கள். ஆங்கிலேயர்களின் ஆட்சி உறுதிப்படத் தொடங்கியதும் தமிழின் செல்வாக்கு தளர்ச்சிபெறத் தொடங்கியது. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் 1901-ஆம் ஆண்டு இராமநாதபுரம் அரசர்களின் குடும்பத்தில் ஒருவரான, பாண்டித்துரைத் தேவர் அவர்கள், இப்போதுள்ள தமிழ்ச்சங்கத்தைப் பழம்பெரும் தமிழ்ச் சங்கங்களின் வழித்தோன்றலாக நிறுவினார். புதுக்கோட்டை, திருவாங்கூர், கொச்சி, மைசூர், தர்பாங்கா, பரோடா ஆகிய சமத்தானங்களின் அரசர்களுடைய கைகளும் ஒன்று சேர்ந்து இந்த முயற்சிக்கு உறுதி தந்தன.

குழந்தைகளுக்கும் மாணவர்களுக்கும், தமிழ் பயிலுவிக்கும் நூற்றுக்கணக்கான தமிழ் வித்துவான்களை உருவாக்கித் தரும் பொறுப்பை இது ஏற்றுக்கொண்டது. சென்னைப் பல்கலைக் கழகம் வித்துவான் பயிற்சிப் பிரிவைத் தொடங்குமுன்னர், தமிழ்நாட்டிலும் இலங்கையிலும் பணியாற்றிய தமிழ் ஆசிரியர்கள் அவ்வளவு பேருக்கும் தாயகம் தமிழ்ச்சங்கம்தான்.

'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்ற வாசகத்தின்கீழ் உள்ள சங்கத்தின் முத்திரையில், பாண்டியன் கொடியிலும் மதுரை அம்மன் கண்ணிலுமாக விளங்கும் மீன், மேலே இருக்கிறது. வடக்கே வேங்கடமலையும் தெற்கே கன்னியாகுமரியுமாக இருக்கும் தமிழக எல்லைகளுக்கு நடுவே தாமரை மலர்ந்து நிற்கிறது பரிபாடலில் 'மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரை' என்ற பாடலில் மதுரை மாநகர் ஒரு தாமரைக்கு

ஒப்பிடப்பட்டிருக்கிறது. ஆக, மதுரை, தமிழ் ஆகியவற்றிற்கு உள்ள முத்திரை அவ்வளவும் சங்கத்துக்கும் உண்டு.

தமிழ்ச் சங்கம் அந்த நாளில் நூல்களைப் பரீட்சை செய்து பார்த்த வரலாறு நமக்குத் தெரியும். இப்போதும் தமிழ்ச்சங்கம் வைக்கும் பரீட்சைகள், பள்ளிக்கூடத்தில் (எஸ். எஸ். எல். சி.) இறுதி ஆண்டு படிப்பவர்களுக்கும், புகுமுக வகுப்பில் படிப்பவர்களுக்கும் தெரியும். அவற்றில் மாணவ மாணவியர்கள் சுமார் 40,000 பேர் பங்கு கொள்கிறார்கள். அவர்களுக்கு இதனால் பல்கலைக்கழகத் தேர்வுப் பரீட்சையில் தமிழ்ப்பாடம் மிக எளிதாக ஆகிவிடுகிறது.

பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கு இன்னொரு போட்டியும் சங்கத்தார் அண்மையில் வைத்தார்கள். திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டு விழாவை ஒட்டி இது நடந்தது. கலந்துகொண்டவர்கள் அவ்வளவு பேரும், ஆறும் வகுப்புக்குக் குறைந்த பள்ளிக்கூடக் குழந்தைகள். இருபது குறட்பாக்களை அச்சுப்போல் எழுதி அனுப்பவேண்டும் என்பதுதான் போட்டி. ஐயாயிரத்துக்கும் மேலாகக் குழந்தைகள் கலந்து கொண்டார்கள். குழந்தைகளை ஊக்கப்படுத்தச் சங்கத்தாரும் ஐம்பது பரிசுகள் வரை கொடுத்தார்கள். திருக்குறள், பாரதியார் பாடல்கள் ஆகிய புத்தகங்களைப் பரிசாக வழங்கினார்கள்.

கல்லூரி அளவில் போட்டி நடந்தது. இராணி மேரி கல்லூரியைச் சேர்ந்த கமலம் என்ற பெண்ணுக்குப் பொற்பதக்கம் கிடைத்தது. 'மக்கள் ஆட்சி முறையில் திருவள்ளுவர் கூறும் கருத்துக்களை எவ்வகையில், எந்த அளவு, எவ்வாறு கடைப்பிடித்தல் வேண்டும்'' என்பது தான் கட்டுரைக்குரிய பொருள். பதக்கம் கொடுக்க வேண்டியது தானே!

இந்த விழாவில் சுவைபட அமைந்தது ஓவியப்போட்டிதான். குறட் கருத்து ஒன்றுக்கு உரிய ஓவியம் வரைந்து அனுப்ப வேண்டும் என்பது போட்டி. இதில் கலந்து கொள்ள வேண்டுமென்று சிறைக் கைதிகள் சிலரும் விரும்பினார்கள். அரசின் அனுமதியோடு அவர்கள் கலந்து கொண்ட போட்டியில் முதற் பரிசு பெற்றவர், திருச்சிச் சிறையைச் சேர்ந்த மணி என்ற ஆயுள் தண்டனைக் கைதி. 'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி எல்லா உயிரும் தொழும்'என்ற குறளைப் புத்தர் பிரான் உருவத்தோடு எழுதி அனுப்பியிருந்தார் அவர். கொலைக் குற்றம் செய்ததற்காக ஆயுள் தண்டனை பெற்ற கைதி அவர்!